# ரோம் நாட்டு வீரன்



சிந்தனைச் சிற்பி

## சி.பி.சிற்றரசு





# வணக்கம்

அருமை நண்பர் சிந்தனைச் சிற்பி சி.பி. சிற்றரசு அவர்கள் தமிழ் நாட்டு பெருமக்களுக்கு பல மேல் நாட்டு அறிஞர்களையும் வீரர்களையும் இதற்குமுன் புத்தக வாயிலாக அறிமுகப்படுத்திவைத்து வாசகர்களிடத்தில் நல்ல அன்பையும் ஆதரவையும் பெற்றுத் திகழ்பவர்.

அதுபோன்றே 'ரோம் நாட்டு வீரன்' என்ற பெயரில் வெளிவரும் "ஜூலியஸ் சீசர்" என்னும் நூலை வெளியிட விரும்பிக் கேட்ட பொழுது மனமுவந்து தந்துதவிய சிந்தனைச் சிற்பி அவர்களுக்கு எமது மனமார்ந்த நன்றியும் வணக்கமும் உரித்தாகுக!

இதனை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த நாதன் அன் கம்பெனியாருக்கும், சிறந்த முகப் பேர்வியம் வரைந்தளித்த ஓவியர் தெளுஸ் அவர்களுக்கும் நாங்கள் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்..

வணக்கம்

பதிப்பகத்தார்

# நன்றி

திருச்சிராப்பள்ளி முத்துவேல் பதிப்பகத்தார் நாம் எழுதிய ரோம் நாட்டு வீரனும், ஜெகமஞ்சப் போரிட்ட 'ஜூலியஸ் சீசர்' என்ற நூலை 'ரோம் நாட்டு வீரன்' என்ற மகுடமிட்டு வெளியிட்டிருக்கின்றார்கள்.

குறிப்பாக வெளிநாட்டு வீரர்கள், சிந்தனையாளர்கள், சீர்திருத்த வாதிகள், அரசியல் மேதைகள், புரட்சி யுகக் கர்த்தாக்கள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளையே எழுதவேண்டுமெனத் துணிந்து, அந்த பணியையே என்னாலியன்றவரை செய்துகொண்டுவரும் என்னை மீண்டும் அப்பணியில் இழுத்துவிடும் பணியை முத்துவேல் பதிப்பகத்தார் செய்திருக்கின்றார்கள். வரலாற்றில் நமக்கு ஒரே ஜூலியஸ் சீசர் இரண்டு விதமாக அறிமுகப்படுத்தப்படுகிறார். ஒன்று — ரோம் நாட்டு வரலாற்று வல்லுனன் புளுடார்க். மற்றொன்று — உலகப் புகழ் படைத்த நாடகப் பேராசிரியர் ஷேக்ஸ்பியர்.

இரத்தந் தோய்ந்த உடலோடு முடிந்த சீசர்பால் அந்த பேராளர்கள் கொண்ட எண்ணத்தைக் கூடுமான வரையில் கோர்வையாக்கித் தந்திருக்கிறோம். எம் எழுத்துப் பணியை ஊக்குவிக்கும் எல்லாருக்கும் எமது உளமார்ந்த நன்றி !

அன்பன்,

சி. பி. சிற்றரசு

# ரோம் நாட்டு வீரன்

---

ஜெகமஞ்சப் போரிட்டான் ஜூலியஸ் சீசர். வர மறுத்த புகழை வாளால் அடக்கிக் கொண்டு வந்து ரோம் நகரத் தலை வாயிலிலே கட்டிக் காத்தான் சீசர். சிறு குன்றுகளின் இடையே நின்று பெருங் கண்டத்தை வென்ருன், சிறு குகையிலிருந்து பெருங் காட்டையாளும் சிங்கம் போல். வரலாற்றிலே வீரர்கள் பலர் வாழ்ந்தனர்; இடியென முழங்கினர்; இறுதியில் பிடி சாம்பலாயினர். சரித்திர சந்துகளிலே அடையாளம் தெரியாமல் மறைந்தனர். சில விண் மீன்கள் தோன்றி மறையும்; சில விண் மீன்கள் மின்னி மின்னி விழும். ஆனுல் என்றும் மறையாத, இடம் விட்டுப் பெயராத துருவ நட்சத்திரமாக இன்னும் வரலாற்று விண்ணகத்தில் தோன்றிக் கொண்டிருப்பவன் ஜூலியஸ் சீசர். அவன் வென்றது வெறும் மண்ணையும், கல்லையுமல்ல; தோற்ருேடிய மக்கள் மனதையும் வென்று, அவர்களும் தம்மையறியாமலே 'தந்தையே' என்றழைக்கக் கூடிய நிலையில் கீர்த்திக் குன்றத்தின் மேல் வீற்றிருந்து மத்திய தரைக்கடல் முழுதும் ஜெக ஜோதியாக விளங்கியவன் ஜூலியஸ் சீசர்.

எகிப்து மண்ணின் மன்னர்குலக் கடைசி மன்னனுன டாலமியின் மகள் **கிளியோ பாட்ராவின்** மெய்க் காதல் மூலம் தோற்றுவித்த ஆண் மகவுக்கு **சீசரின் டாலமி** எனப் பெய ரிட்டு நைல் நதி நாகரீகத்தையும் டைபர் நதி நாகரீகத்தையும் ஒன்ருக்கி இரத்த பாசத்தை உண்டாக்கியவன் சீசர்.

வாழ்க்கையிலே வீழ்ந்தோர் வாழ்ந்ததில்லை என்ற வேதாந் தம் பேசுவோருண்டு. வாழ வெளிநாடு சென்றவர்கள், அங்கே வருந்தி உழைத்து வாழவேண்டுமேயன்றி, வாள் காட்டி பய முறுத்திப் பிறகு கோல் தூக்கியாளக்கூடாது என்று சன்மார்க்கம் போதிப்பவர்களு முண்டு. தாயகத்திலிருந்து வேற்று நாட் டுக்குச் செல்வோர் எத்தனை நூற்ருண்டுகள் அங்கே வாழ்ந் தாலும் அன்னியரேயன்றி அந்த நாட்டாரல்ல என்ற அரசி யல் மகுடி ஊதிகளுமுண்டு. பிறந்த நாட்டிலிருந்து பெயர்ந் தோடியவர்கள் இறந்த வாழ்க்கை வாழவேண்டுமே யன்றி சிறந்த வாழ்க்கை எங்ஙனம் அவர்களுக்குக் கிட்ட முடியும் என்று கிழட்டு நியாயம் பேசுபவர்களுமுண்டு.

தன்னம்பிக்கை யுடையவன், தளராத உறுதியுடையவன் வறுமையில்லாமல் வாழ நினைப்பவன் எவனுயினும் தான் அடி யெடுத்து வைத்த மண்ணைத் தனதாக்கிக் கொள்கின்ருன். அவ னிடும் ஓங்கார சப்தத்திற்கு அடங்கிவிடுகிறது அந்த மண்.

குடிபுகுந்த நாட்டில் குன்றுபோல் வசதிகள் குவிந்து கிடந்தாலும், தான் விட்டுச் சென்ற குள்ளக் குட்டிச் சுவர்களை யும் வான் நுழையும் கூரைகளையும் நினைந்து நினைந்து நாச மாய்ப் போகும் சமூகத்தால் உண்டாக்கப்பட்டதல்ல ரோம். அதன் தோற்றுவாயே அலாதியானது.

சீசருக்கு முன்னே அவனியைக் குலுக்கிய கிரேக்கத்தின் காளை மாசிடோனியா மாவீரன் அலெக்சாந்தர். பனி மலை யைத் தாண்டி இப் பாரிலும் அடியெடுத்து வைத்தவன் பிலிப் பின் செல்வன். ஜீலம் நதிக் கரையில் புருஷோத்தமன் ஒரு வனே அவனை எதிர்த்தான். அலெக்சாண்டர் போர்க்களம் கண்ட முதல்நாள் தொட்டு கடைசிநாள் வரையிலும் அவனை எதிர்த்தவன் ஐரோப்பா கண்டத்தில் ஒருவனுமில்லை. அவன்

நீட்டித்திச் சென்ற போர்க் களக் குதிரைகளின் குளம்படி சப்தம் கேட்டதும் ஓடி மறைந்தனர் ஐரோப்பிய மன்னர்கள். எனினும் இந்திய மண்ணில் அலெக்சாண்டர் போர்க் களத்தில் நேருக்கு நேர் சந்தித்த எதிரி ஒருவன். அவன்தான் வரலாற்றில் போரஸ் என்றழைக்கப்படும் வீர புருஷோத்தமன். எதிரியின் வீரத்தை மெச்சி, நெஞ்சுரத்தை மதித்து அவனிட மிருந்து வென்ற நாட்டை அவனுக்கே பரிசாகத் தந்து வீரத்தை வணங்கி விடை பெற்றுச் சென்ருன் தர்க்கவாதிகள் வாழ்ந்த நாட்டான். அகிலத்தில் அவன் பெயரால் எழும்பிய கோட்டைகள், துறைமுகங்கள், நினைவுச் சின்னங்கள் பலப் பல. எனினும் சீசர் அடைந்த இடத்தை அலெக்சாண்டரால் அடைய முடியவில்லை. ஒன்று; அலெக்சாண்டர் இளமையி லேயே இறந்துவிட்டான். மற்ருென்று; வென்ற நாடுகளில் அரசியலை சரியாக அவன் வகுக்கவில்லை.

ஆனல், ஜூலியஸ் சீசர் இன்றைய ஐரோப்பிய நாகரீகத் தின் தந்தை, கலைஞன், அறிஞன், அரசியல் மேதை, சட்ட நிபுணன், தக்கோரை தக்கபடி நடத்தும் தகைமையாளன். அவன் கால் என்று அன்று அழைக்கப்பட்டு, இன்று பிரான்ஸ் என்று அழைக்கப்படும் நாட்டுக்கும், மற்றுமுள்ள பிரிட்டனுக்கும், ஸ்பெயினுக்கும், எகிப்துக்கும் அன்று சீசரின் படைகள் சென்ற வழிகள் தான் இன்னும் ஐரோப்பிய நாடுகளுக்கு நெடுஞ்சாலை களாக அமைந்திருக்கின்றன. நிதி சேமிப்பு, பண்ட மாற்றம், பஞ்ச காலத்தில் அரசாங்கமே முன் வந்து குடிகளுக்கு உணவுப் பொருள்களை வழங்கும் முறை, ஐக்கிய நாணயச் சங்கம், பாங்க், செக், டிராப்ட் முறைகள் எல்லாம் அவன் செய்துதந்த ஏற்பாடு களே. தோல்வி கண்ட நாடுகளில் உள்ள குடிகளுக்கு உரிமை வழங்குதல், அவர்களை எந்நாளும் எதிரிகளாகவே பாவிக்காமல் நண்பர்களாகவும், அவர்கள் நாட்டை நேச நாடுகளாகவும் பாவித்த பெருமையும் முறையும் ஜூலியஸ் சீசரையேச் சாரும்.

கால எல்லையின் புகழேணியின் உச்சியிலமர்ந்து அர சோச்சி அகிலமெல்லாம் புகழ் பரப்பி வாழ்ந்து வீழ்ந்தோர் மிகச் சிலரில் மிகச் சிறந்தவன் சீசர். ரோம் சாம்ராஜ்ய வர லாற்று வானத்திலே செக்கர் வெள்ளியென மின்னி மறைந்த

பலருள் இன்னும் மின்னிக் கொண்டே இருப்பவன் ஜூலியஸ் சீசர். விரிந்த வீரர் பட்டியலை உடைத்தாயிருந்தது ரோம். அரசியல் ஞானி மாரியஸ் காயஸ், செம் பருதியெனத் திகழ்ந் தவன் சல்லா. இந்த இருபெரும் வீரர்களின் தளபதிகளாக இருந்து பணியாற்றிய போர்ப்புலி பாம்பே. ஜெகம் நடுங்கிய ஜூலியஸ் சீசர், சொல்லால் மற்றவர்களைக் கொல்லும் திறம் படைத்த அந்தணி, ஆற்றல் மிக்க புரூடஸ், சமயமறிந்து பழி தீர்க்கும் காஷியஸ், துணிவுடைய காஷ்கா, புலவன் சின்னு, சொல்லையேவி வஞ்சம் தீர்க்கும் கைதேர்ந்த மெதல்லஸ், இதனை இதனால் முடிக்கலாம் என்றுரைக்கும் சிம்பர், முதிர்ந்த அனுபவம் பெற்ற சிசிரோ — முடியாட்சி மறைந்த பின் தோன்றி ரோமை குடியாட்சியாக்கிய பெரு வீரர்கள்தான் மேற்சொன்னவர்கள். அவ்வளவு பேர்களிலும் ரோம் நகரம் தன் தங்கத் தொட்டிலிலாட்டிய குழந்தை ஜூலியஸ் சீசர்தான். எதிரிகளிடம் நெருப்பாய், நண்பர்களிடம் நீராய், அடங்கியவர் களிடம் கருணைக் கடலாய், அடங்காதவரிடம் அரிமாவாய், தோற்றவரிடம் தாயாய், அரசியலில் மெச்சத் தகுந்த மேதை யாய், விழிப்பில்லாதார்க்கு வாழ வழிகாட்டிய விளக்குத் தூணய், ஈரம், ஈகை, நன்னெஞ்சம் ஆகியவைகள் ஒருங்கே அமையப் பெற்று வாழ்ந்து தன் இனத்தாராலேயே குத்திக் கொல்லப்பட்டு இறந்தவன் சீசர்.

## வீழ்த்த முடியாத கடவுள்

சீசரின் சிலைக் கடியிலே வீழ்த்தமுடியாத கடவுள் என்று பொறிக்கப் பட்டிருக்கிறது. அவன் வீழ்ந்துவிடவில்லையா? ஆம், வீழ்ந்து விட்டான். இல்லை, இல்லை, சதிகாரர்களால் வீழ்த்தப்பட்டான். அவன் உடல் வீழ்த்தப் பட்டது. அவன் ஆவி பிரிக்கப் பட்டுவிட்டது. இன்றைக்கு இருபது நூற்றாண் டுகளுக்கு மேலாகவே அவன் உலக வரலாற்றில் வீழ்த்த முடியாத கடவுளாகவே திகழ்கின்றான். இன்னும் ஐரோப்பா வின் நெடுஞ்சாலைகளிலே நடந்து செல்வோர் வண்டி வாக னதிகளில் ஊர்ந்து செல்வோர் அவன் பெயரை சொல்லித் தான் தீரவேண்டும். இது எங்கள் நாகரிகம் என்று பேசும் ஐரோப்பியர், அந்த நாகரீகத்தைத் தந்த தந்தை ஜூலியஸ்

சீசரின் நாமத்தை நினைவு படுத்திக் கொண்டுதான் தீர வேண்டும். நீதி, நிதி இவை இரண்டின் கர்த்தா சீசர்தான். கலை வளர்ச் சோலைகள், அவன் திரிந்த இடங்கள்தான். இன்றைய ஐரோப்பிய அரசியலமைப்பு அவன் தந்த தானம். அவன் அமர்க்களத் தாகம் மட்டும் கொண்டவனல்ல; அறிவுத் தாகமும் கொண்டவன். அவை எங்கெங்கே இருந்தனவோ அவற்றை யெல்லாம் ரோம் சாம்ராஜ்ய எல்லைக்குள் கொண்டு வந்து சேர்த்தவன் ஜூலியஸ் சீசர்.

பிறர் மனதை வீணையென மீட்டி, அந்த நாதத்தில் விளையாடும் இங்கிதமறிந்தவன் சீசர்! ஒருவனை பார்க்கும் போதே அவன் இன்ன நோக்கமுடையவன் என்பதை யறிந்து கொள்ளும் பேராற்றல் மிக்கவன்தான் சீசர். எனினும், வீழ்த் தப்பட்டான். ஏன்? யார்மேல், தான் சந்தேகப்பட முடியாதோ அத்தகு ஆருயிர் நண்பர்களால் கொலை செய்யப்பட்டான். தாயே சேயைக் கொன்றதைப்போல, சிரித்தவர் கைவாளா லேயே தன் உடலில் செங்குருதி கொட்டும் என்று அவன் நினைக்கவில்லை! என் அருமைத் தலைவனே! ஆருயிர் நண் பனே! அரசியல் மேதையே! போர்க்களச் சிங்கமே! புவியாண்ட வீரனே! என்றெல்லாம் இடைவிடாது ஏற்றிப் போற்றியவர் களே அவனை ஈமத்துக்கனுப்பி விட்டார்கள்.

## ரோம்

இன்று ரோம் இதாலியின் தலைநகரம். இயேசு பிறப்பதற்கு முன் அது ஒரு பெரிய சாம்ராஜ்யம். சீனத்தில் மகான் கன் பூஷியஸ் தோன்றிய நேரம். இந்தியாவில் புத்தரும் மகா வீரரும் தோன்றிய காலம், கிரேக்கத்தில், தர்க்க ஞானி சாக்ரடீஸ், பிதகோரஸ், பிளாட்டோ, போன்ற அறிஞர்கள் நடமாடிய நேரம். மத்தியதரைக் கடல் மேட்டில் 15 மைல் தூரத்தில் டைபர் நதிக் கரையில் ஏழு குன்றங்களுக்கிடையிலே ஒரு கட்டாந்தரைக் காடு, புல்வெளி, காட்டு மிருகங்கள் நடமாடிய பூமி. எங்கோ ஒரு சிலர் மலைச் சரிவுகளிலேயும் புல் வெளி களிலேயும் குடி இருந்தும் குடிபெயர்ந்தும் கொண்டிருந்த

இடம். அப்படி நாகரீகமற்றுத் திரிந்த அவர்களை ட்ரஸ்கானியர் என்று அழைக்கின்றான் வரலாற்று வல்லுனன் ப்ளூடார்க்.

கிருஸ்துவுக்கு முன் 753-ம் ஆண்டு ஒரு சிலர் படாத தொல்லைகளைப்பட்டு காலடி எடுத்து வைத்தனர். அவர்கள் யார்? அவர்கள்தான் பிழைக்க வழியறியாமல் மத்திய ஆசியா விலிருந்து புறப்பட்டு உலகத்தின் பல பாகங்களுக்குச் சென்ற பல பிரிவினரில் ஒரு பிரிவினர்தான் அந்த ஏழு குன்றங்களுக் கிடையே புகுந்தவர்கள். ரோமுலஸ் என்பவன்தான் தன் இனத்தாரை அழைத்துக்கொண்டு உள்ளே புகுந்து ஒரு நகரையுண்டாக்கினான். இவர்கள் குடியேறுவதைக் கண்ட அந்த ஆதிக் குடிகளான ட்ரஸ்கானியர் போர்த் தொடுத்தனர். எனினும் வந்தவர்களிடம் தோற்றோடினர். அந்த வெற்றியைத் தேடித் தந்தவன் ரோமுலஸ். ஆகவே அவன் பெயராலேயே அந்நகரை ரோம் என்றழைத்தனர். ஒன்றுமில்லாத இடத்தில் ரோம் நகரம் தோன்றி விட்டது. டைபர் நதி பெருமிதத்தோடு ஓடிக்கொண்டிருக்கின்றது. ஏழு குன்றங்கள் விண் நோக்கி நின்றுகொண்டிருக்கின்றன. இயற்கைக் காட்சிகள் அழகை உமிழ்ந்த வண்ணமிருக்கின்றன. அவர்கள் வாழ்க்கையிலே எந்தவிதப் பஞ்சமுமில்லாமல் வாழ்க்கையைத் தொடங்கினார்கள். எனினும் இரண்டே இரண்டுக்கு மட்டும்தான் அவர்களிடம் பஞ்சம் தோன்றிவிட்டது. ஒன்று கடவுள் பஞ்சம், மற்றொன்று நாகரீகப் பஞ்சம். இந்த இரண்டையும் அண்டை நாடான கிரேக்க நாட்டிலிருந்து வாங்கிக்கொண்டார்கள். கடன் வாங் கியது தெரியாமலிருக்கவோ, வேறு என்ன காரணத்தாலோ, கிரேக்கக் கடவுள்களின் பெயர்களையே மாற்றி விட்டார்கள். அவர்கள் பேசிவந்த மொழி லத்தீன்.

## ஆட்சித் தொடர்

கிருஸ்துவுக்கு முன் 753-ல் புதிய நகரத்தை நிர்மாணித்து அதன் ஆட்சித் தலைவனாகத்தானே அமர்ந்து 37 ஆண்டுகள் ஆண்டு 716-ல் உயிர் நீத்தான் ரோமுலஸ். அவனுக்குப் பின் அரியாசனமேறிய மன்னன் ஸ்மாபாம் பிலியஸ். இவன் கி. மு. 715-ல் தொடங்கி 676 வரை சுமார் 39 ஆண்டுகள் ஆண்டு,

அந்திமம் அடைந்தான். மூன்ருவது முடியரசனுகத் தோன்றி யவன் டல்லஸ் ஹாண்டிலியஸ். இவன் தன் செங்கோலை 674 முதல் 641 வரை பிடித்திருந்து 32 ஆண்டுகளுக்குப் பிறகு கீழே சாய்ந்தான். நான்காவது மன்னனுகத் தோன்றியவன் அன் கஸ் மாரிஷியஸ். இவன் 642 முதல் 618 வரை சுமார் 24 ஆண்டுகள் ஆண்டு விடை பெற்றுக்கொண்டவன். ஐந்தாவது வேந்தன் டார்கினியஸ் பிரிஸ்கஸ். இவன் ஆண்ட காலம் 618 முதல் 578 வரை நாற்பதாண்டுகள். ஆருவது அரசன் செர்வியஸ் டல்லியஸ். இவன்தான் மற்ற மன்னர்களைவிட நீண்ட நாட்கள் அதாவது 44 ஆண்டுகள் ரோம் நகரை ஆண்டான். இவன் காலம் கி. மு. 578 முதல் 534 வரை. ரோமிலே என்றென்றும் குடியாட்சி தலையெடுக்க ஒட்டாமல் கடைசி மன்னனுக ஆண்டவன் டார்கீனியஸ் சுபர்பஸ். இவன் 534 முதல் 509 வரை சுமார் 25 ஆண்டுகள் ஆண்டு அரியா சனத்தைக் கண்காட்சிசாலைக்கு அனுப்பி தானும் மயானம் நோக்கி நடந்த கடைசி பார்த்திபன். வரிசைக்கிரமமாக ஏழு மன்னர்கள் ஆண்டாண்டு ஓட்டிய 541 ஆண்டுகளில் ரோமில் ஏற்பட்ட நிலை என்ன என்பதை கவனிப்போம்.

கடைசி மன்னன் செங்கோலைக் கீழே வைப்பதற்குள் மக்களிடையே உயர்வு, தாழ்வு, போட்டி, பொருமை, பூசல் தோன்றிவிட்டது. செழித்தோங்கி வளரும் பயிரினங்களுக்கு சிறு சிறு நோய்கள் தோன்றுவதைப்போல சிறு சிறு பூசல்கள் பெரும் போர்களாக உருவெடுத்துவிட்டன. இறந்த காலத்தை எண்ண மறந்தனர். அவர்கள் அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு புறப்பட்ட இடம், சேர்ந்த இடம், சேர்ந்த இடத்தில் அவர்கள் கண்ட சாம்ராஜ்யம், அதனுல் அவர்கள் பெற்ற வாழ்வு ஆகிய அவ்வளவையும் மறந்து, உயர்ந்தவர்கள் என்ற பொருள் படும்படியான பாட்ரீஷியன்ஸ், தாழ்ந்திவர்கள் என்ற பொருள் படும்படியான பிளிபியன்ஸ் எனும் இருவகையினராகப் பிரிந் தார்கள். நெடு நாட்களாகவே வரலாற்றின் கொள்ளை நோயெனத் தோன்றியிருக்கிறது சமூகத்தின் இந்தக் குள்ளமதி.

மத்திய ஆசியாவிலிருந்து கிளம்பி ரோம் நகரம் சேருகின்ற வரையில் கிடைத்ததை பகுத்துண்டுச் சென்றவர்கள்,

இறுதியில் ஒருவரோடு ஒருவரிருந்து உண்ணவும், ஒருவர்க் கொருவர் திருமணம் முடித்துக்கொள்ளவும் மனமில்லாதவர் களாய் விட்டார்கள். இன்னும் ஆசியாவின் கீழ்க்கோடியில் அடித்துக் கொண்டிருக்கின்ற நச்சுக்காற்று அன்றே அவர் களையும் பின் தொடர்ந்து போயிருக்கின்றது போலும்.

## பிளவும் பேதமும்

மேன் மக்களாகத் தம்மைக் கருதிக்கொண்ட பாட்ரீஷியன் கள், கீழ் மக்களாக அவர்களாலே கருதப்பட்ட பிளிபியன்சுகளை நடத்திய விதத்தால் ஏற்பட்ட பிளவும் பேதமும் ரோம் நகர அரசியல் முறைக்குப் பெருந் தலைவலியாக முடிந்தது. கீழ் மக்கள் எனப்படுவோர் படையில் குதிரை வீரர்களாக சேவை செய்யவும் மறுக்கப்பட்டனர். உடனுண்டு உண்பதற்குப் பெரும் தடை. மணவினையில் கலப்பில்லை. தவறி எங்கேயாவது கலப்புக் காதல் ஏற்பட்டு குழந்தை பிறந்தாலும் அந்தக் குழந்தை கீழ்க் குலமாகவே கருதப்பட்டது. பெருவாரியான நிலங்களெல்லாம் மேன் மக்களிடம் இருந்தால் உழுது உழைத்து மேன் மக் களுக்குக் கொட்டிக் கொடுத்து அரை பட்டினி கால் பட்டினி இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. நிலம் விளைந்தாலும் விளையாவிட்டாலும் மேன் மக்கள் என சொல்லப்படும் பிரபுக் களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கட்டாயம் கொடுத்துத் தீர வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டார்கள். சமூக வாழ்வில் தான் இந்த கொடுங்கோன்மை என்றால், அரசியல் வாழ்விலும் இதைவிட மோசமான நிலைதான். இவ்வளவு மோசடிகளும் கடைசி மன்னனான **டார்கியஸ் சுபர்பஸ்** என்பவன் கண் முன்னாலேயே நடைபெறுகின்றது.

மக்களுள் நடக்கும் இந்தப் போராட்டத்தை ஒரு காடாக நினைத்து அவனும் வேட்டையாடக் கிளம்பி விட்டான். பெரு மக்கள் சாதாரண மக்கள் எல்லோரையுமே கொடுமைப் படுத் தினான். எந்த நேரமும் தன் பக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்த இராணுவ வீரர்களால் செனெட் சபையினரில் பலரைக் கொன்று குவித்தான். செனெட் சபை மூலம் ஆட்சியை நடத்த மன மில்லாத இவன் அராசரீகத்திலே குதித்து விட்டான். மக்கள்

பயந்தனர். செனட் சபை வலுவிழந்தது. ஏழை மக்கள் உரிமைகள் பறிக்கப்பட்டு வெறும் அடிமைகளாயினர். கொடுங் கோலும் சித்ரவதையும் அன்றாட நிகழ்ச்சிகளாய் விட்டன. இவன்தான் இப்படி யென்றால், இவன் மகன் செக்டஸ் தந்தையையும் மிஞ்சி தருதலையாட்டம் ஆடினான். ஆறாத் துயரடைந்த மக்கள் அணலெனக் கிளம்பினர். அந்த அக்னி ஜ்வாலையைத் தாங்க முடியாத மன்னனும் அவனீன்ற மகனும் ஊரைவிட்டே ஓடினர். இவர்களோடு செங்கோலாட்சிக்கு ஈமச்சடங்கை முடித்து விட்டனர்.

## சர்வாதிகாரி கான்சல்

மன்னராட்சிக்கு விடைகொடுத்தனுப்பிய பின் ஆண்டுக் கொரு முறை ஒரு சர்வாதிகாரியும் கான்சல் என்று ஒருவனும் நியமிக்கப்பட்டனர். அரசியல் நிர்வாகம், இராணுவப் பொறுப்பு, நிதி நிலைமையனைத்தும் இந்த இரண்டு பேர்களே பார்த்து வந் தார்கள். இந்த மகத்தான பொறுப்புகளையும் உயர்ந்தவர்கள் என்று சொல்லப்படும் பாட்ரீஷியன்களிடமே இருந்தன. ஆகவே ஏழைகளுக்கு இந்த நிலையிலும் நீதி கிடைக்கவில்லை. இதனால் பலப்பல உள்நாட்டுக் கலகங்கள் ஏற்பட்டதோடு, வெளி நாட்டுப் படையெடுப்பையும் அடிக்கடி சமாளிக்க வேண்டி யிருந்தது. இதனால் ஏழைகளுக்கு அதிகாரமற்ற சில உயர்ந்த பதவிகள் கிடைத்தன. அதன் காரணமாகவே உள் நாட்டில் உரிமைப் போரும் சமூகப் போரும் பாம்பென படமெடுத்தது. இந்த நிலையிலேயே இருநூறாண்டுகள் கால வெள்ளத்தை ரோம் கடந்து விட்டது.

உள்நாட்டுப் போர் நடத்திப் பயிற்சி பெற்ற ரோமானியர் கள் வெளி நாட்டில் தோன்றிய ஒரு பெரும் போரை சமாளிக்க வேண்டியிருந்தது. அதுதான் முதல் முதல் நடத்திய கார்த் தேஜினியப் போர். ஸ்பெயினையும் பிரான்சையும் அடக்கித் தன் வசம் வைத்துக் கொண்ட கார்த்தேஜினியர்கள் வாணிபத் துறையிலும், கடலாதிக்கத்திலும் சிறந்து விளங்கினார்கள். போனீஷியர்கள் என்றழைக்கப்பட்ட இந்த கார்த்தேஜினியர்

களுக்கும் ரோமானியர்களுக்கும் இருபது ஆண்டுகளில் மூன்று முறை போர் நடந்தது. இதைத்தான் பியூனிக் போர் (Punic War) என்கிறோம்.

கடைசி முறையாக, ரோமாபுரி வீரர்களால் கார்த்தேஜ் நகரம் தாக்கப்பட்டு, கோட்டை முற்றுகையிடப்பட்டது. ஆறு நாட்கள் தொடர்ந்து முற்றுகை யிட்டதன் விளைவாக வெளியே இருந்து உணவுப் பொருள்கள் உள்ளே போக முடியாததால் உள்ளே இருந்த வீரர்கள் பட்டினியால் சுருண்டு விழுந்தனர். கடைசியில் வேறு வழியில்லாமல் சரணடைந்தனர்.

ரோமானியர்கள் வெற்றிக்குப் பின் கோட்டையைத் திறந்தனர். முற்றுகையிட்ட முதல் நாள் ஐந்து லட்சம் பேர் உயிரோடிருந்தனர். கடைசி நாள் திறந்து பார்க்கும்போது உயிரோடிருந்தவர்கள் தொகை ஐம்பதினாயிரம் பேர்களே. நாலு லட்சத்து ஐம்பதினாயிரம் பேர்களின் உடல் மட்டும்தான் இருந்தன ; உயிரில்லை. எங்கும் பிணக்காடு. இந்தப் பெரும் போரை நடத்த படையை நடத்திச் சென்ற தளபதிகள் இருவர். ஒருவன் பாம்பே; மற்றொருவன் ஜூலியஸ் சீசர். இந்த கார்த்தேஜினியப் போரில்தான் ஜூலியஸ் சீசரின் பாட்டன் ஒருவன் எதிரியின் யானையைக் கொன்றுவிட்டான். யானைக்கு லத்தீன் மொழியிலே சீசர் என்று பொருள். ஆகவே அன்று தொடங்கி, அவ்வீரன் வழி வந்தவர்களனைவர்க்கும் சீசர் என்று பெயர் வழங்குகிறது. ஜூலி குடும்பப் பெயர். வீனஸ் என்ற தெய்வத்தின் வழி வந்தவர்கள் என்பது அவர்கள் நம்பிக்கை. ஆகையினால்தான் சீசர் தன்னை ஒரு கடவுளென்றே சொல்லிக்கொண்டு பெருமைப்பட்டான். ஆண்மார்த்திகத் துறையிலே அவன் அழிந்த கடவுளாய் விட்டான். ஆனால் உலகாயுதத் துறையிலேயும் உலக வரலாற்றிலேயும் அவன் அழிக்க முடியாத கடவுளாய் விட்டான்.

சீசருடைய வரலாற்றைத் தொடங்குமுன் ரோமில் என்னென்ன நடந்துகொண்டிருந்தன என்பதைக் கவனிப்போம். பாம்பே, சீசர், புருடஸ், சீசரோ ஆகிய இந் நால்வரும் வீரர்க

ளாகவே விளங்குகின்றார்கள். என்றாலும் சீசர் என்ற விளக்குத் தூண் நிழலில் மற்றவர்கள் பெயர் மறைந்து விடுகிறது.

பல வெளிநாட்டு வெற்றியால் கிடைத்த பொருள்கள் ரோம் சாம்ராஜ்ய கஜானாவை வீங்க வைத்தது. போரில் வெற்றிகண்ட வீரர்கள் தங்கள் தங்கள் கிராமங்களுக்குச் செல்லாமல் ரோம் நகரத்திலேயே தங்கி குடி, கூத்து, கேளிக்கைகளில் நிலைத்துவிட்டனர். போர்க் களத்தில் இரத்தஞ் சிந்திக் கொண்டு வந்து குவிக்கும் பொருள்களால் பிரபுக்கள் சுகமடையவும், ஆடம்பர வாழ்க்கையை மேற்கொள்ளவும் தங்களுக்கு மாத்திரம் குறிப்பிட்ட தொகையை சம்பளமாகக் கொடுக்கப் படுவதையும் ஒப்புக்கொள்ளாத போர் வீரர்கள், தாங்களும் நகரத்திலே தங்கிவிட்டார்கள். அவர்களை திருப்திப் படுத்துவதற்காக பொதுநிதியிலிருந்து ஏராளமான பொருள் செலவு செய்யவேண்டிய நிலையில் சர்க்கார் வந்துவிட்டது. இல்லையானால், எதிரிகளை வீழ்த்த எந்த ரோம் நாட்டு வீரர்கள் பயன் பட்டோர்களோ, அதே வீரர்கள் ரோம் நகரத்தையே தாக்கினாலும் தாக்கக்கூடும் என்ற அச்சம் ரோம் சர்க்காருக்கு வந்து விட்டது.

போர் வீரர்கள் இந்தப் புரட்சியை நடத்திக்கொண்டிருக்கும்போதே, இவர்களால் தோற்றோடிய இதாலிய மலை ஜாதியினர் உரிமை முரசம் கொட்டத் தொடங்கி விட்டனர். இந்த இரண்டும் இரண்டு தலைவலிகளாகத் தோன்றிவிட்டது ரோமுக்கு. போர் வீரர்கள் கேட்டதைக் கொடுத்து சமாதானப் படுத்துவது ஒன்று. சுற்றிலும் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கும் மலை ஜாதியினரின் எதிர்ப்பை யடக்குவது ஒன்று. இந்த இரண்டையும் எவன் சமாளிக்கின்றானோ அவனே தலைவனாய் விட்டான். இந்த இரண்டையும் ஒரே காலத்தில் செய்து தர முடியாத செனெட் சபை வலிவிழந்து விட்டது.

இந்தப் போர் வீரர்களுக்கு நிலங்களையும் தர முடியவில்லை. ஏனெனில் ஏராளமான நிலங்கள் பிரபுக்கள் வசமிருந்தன. அவைகளைப் பார்ப்பதற்காக ஏராளமான வெளிநாட்டு அடிமைகள் பிரபுக்கள் வசம் இருந்தார்கள். அவர்களை அதட்டி வேலை

வாங்குவதென்பது அவ்வளவு எளிதான செயலல்ல. ஆகவே நிலச் சீர்திருத்தத்தை சட்ட மூலமே செய்துவிட வேண்டு மென்று நினைத்த டைபீரியஸ், காயஸ், என்ற இரு பெரும் தலைவர்கள் தீவிரமாக ஈடுபட்டனர். பிரபுக்களின் சீற்றம், அவர்களுடைய கொத்தடிமைகளின் துணிச்சல், சில அதிகாரி களின் ஆதரவு இவ்வளவும் சேர்ந்து மேற்படி டைபீரியசையும் காயசையும் கொலைக்களத்துக் கனுப்பிவிட்டது. வலுத்தவன் கை ஓங்கி விட்டது. அதோடு, அந்த நிலச் சீர்திருத்தம் என்ற பேச்சே மயக்கம் போட்டு வீழ்ந்து விட்டது. இந்த கொலைக்குப் பின் (Trim virate) ட்ரிம் வைரேட், பதின்மர் குழு, (Consul) கான்சல், இரண்டு பிரதம நீதிபதிகள் கொண்ட சபை, (Military Tribune)இராணுவ விசாரணை மன்றம் எல்லாம் செயலற்றுப் போயின.

## யார் தலைவன் ?

அதன் பிறகு யார் படைகளைத் திரட்டி பல நாடுகளின்மேல் படையெடுத்து வெற்றி கண்டு வருகின்றனோ அவனே ரோமின் தலைவனானன். முடியாட்சி மடிந்து குடியாட்சி தோன்றி, அதுவும் சவக்குழிக்குப் போய், ஒரு சர்வாதிகாரியின் கைக்கு மாறுகிறது ரோம். இந்த நிலையிலே கி. மு. 104-ல் பல நாடுகளை வென்று கான்சல் பதவிக்கு வந்தவன் மாரியஸ் கயஸ். இவன் தலைவனானபின் பல வெளிநாட்டுப் போரையும், மலைஜாதியினர் கலகத்தையும் சமாளிக்க வேண்டியவனானன். இவன் தயங்கிக்கொண்டிருந்த நேரத்தில் பிரபுக்களின் பக்கம் சேர்ந்த சல்லா என்பவன் மலைஜாதியினருக்கு குடி உரிமை வழங்கி தீரத்தோடு நிலைமையை சமாளித்தான். இதனால் மக்கள் இனத்தில் சேர்ந்த மாரியஸ் கயசுக்கும் பிரபுக்கள் இனத்தில் சேர்ந்த சல்லாவுக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. இருவரும் ஒருவரை யொருவர் தாக்கிக்கொள்ளத் தொடங்கி மாரியஸ் காயசை தாக்கி ஆப்பிரிக்கா நோக்கி ஓடச் செய்து விட்டு, சல்லா ஒரு பெரும் படையோடு ஆசியா நோக்கி புறப் பட்டான். ரோமில் சல்லா இல்லாததை யறிந்த மாரியஸ் ரோமுக்குத் திரும்பி வந்து சல்லாவின் நண்பர்களை எல்லாம் வீழ்த்தி தான் பதவியிலமர்ந்தான்.

ஆசியா நோக்கிச் சென்றிருந்த சல்லா மூன்றாண்டு களுக்குப்பின் தாயகம் திரும்பினன். பழிக்குப் பழி வாங்கி ஜன நாயகக் கட்சியை வேரோடு களைந்தெறிந்து கி. மு. 81-ல் சர்வாதிகாரியானன். இதை எதிர்த்து நிற்க முடியாமல் தோற்றுவிட்ட மாரியஸ் காயல் கி. மு. 86-லேயே மாண்டான்! சல்லாவின் காலத்தோடு ரோமில் குடியரசு முறைக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டுவிட்டது. சல்லாவுக்குப் பிறகு மக்களை வீரத்தால் கவர்ந்தவன் சல்லாவின் தளபதிகளில் ஒருவனான பாம்பே.

## பாம்பே

ரோம் மாதா பெற்றெடுத்த வீர மைந்தர்களிலே தலை சிறந்தவன் பாம்பே. அதே நேரத்தில் சீசரும் மாபெரும் வீரன் தான். சீசரையும் கைக்குள் போட்டுக் கொண்டுதான் தலை வனாக வேண்டுமென்ற ஆசையால் சீசரின் மகள் ஜூலியாவை மணந்து கொண்டான். அன்பு, காதல், ஆனந்தம் ஆகிய எவையுமே அவர்கள் மணவினைக்குக் காரணமல்ல; வெறும் அரசியல் காரணங்கள்தான். மத்தியதரைக் கடலைக் கலக்கிய பாம்பே போர் வீரன் ஜூலியஸ் சீசரின் வீரத்தால் கலங் கினன். பகையை பகையால் வெல்ல முடியாது. அன்பால் அனைத்தையும் வெல்லலாம் என்ற தந்திரம் பாம்பே, ஜூலி யாவை திருமணம் செய்துகொள்ளும் வரையிலிருந்தது. ஆனல் இந்த எண்ணம் ஜூலியாவின் தந்தை ஜூலியஸ் சீசர் தனக்கு மாமனாராகும் வரையிலிருந்தது. பிறகு மாமனார் தானே என்ற மலிவான எண்ணந்தான் பாம்பேவுக்குத் தோன்றியதே தவிர அவனும் ஒரு மாவீரன் என்ற எண் ணத்தை மறந்தே போய்விட்டான். ஆகவே மருமகனை பிறகு சர்வாதிகார விஷம் தலைக்கேறிவிட்டது. பாபிலோன், எகிப்து, ஏதன்ஸ், ஸ்பெயின் முதலான எல்லா நாடுகளும் நடுங்க வீரநடைபோட்ட வெற்றிச் செல்வன், கடற் கொள்ளைக் காரர்களை விரட்டி விரட்டி யடித்து, கடற்செல்வோர் பயத்தைப் போக்கிய பராக்கிரமசாலிக்கு பதவி ஆசைப் பிடித்துக் கொண் டது. பாம்பே அடைந்த வெற்றிகளுக்கெல்லாம் சீசரும் காரணமானன் என்பது ரோம் மக்கள் மறந்துவிடக் கூடிய தல்ல. ஆனல், பாம்பே எப்போது பதவியைக் கைப்பற்றுவது

என்று சமயம் பார்த்திருந்தான்! ஏனெனில், சீசர் ரோமில் இருக்கும் வரையில் அது முடியாது. அதற்காக தக்க நேரத்தில் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் பாம்பே.

## காலின் மேல் படையெடுப்பு

இப்போது நாம் பிரான்சு என்று அழைக்கும் நாடுதான் அன்று கால் என்றழைக்கப்பட்டது. அதை வெற்றி கண்டு வரச் சென்றுவிட்டான் சீசர் ஒரு படையுடன். ரோம் வீரர்கள் தலைநகரத்தில் இருப்பதே மிகச் சொற்பம். எப்போதும் எந்த நாட்டின் மேலாவது படையெடுத்துச் செல்வதும், அவைகளை வென்று செல்வக் குவியல்களைக் கொண்டுவந்து ரோம் நகரக் கஜானாவில் சேர்ப்பதும், வென்ற நாடுகளில் சில சீர்திருத்தங்கள் செய்வதும், அதன் பெயரால் அந்த வீழ்ந்த நாட்டு மக்களின் வெஞ்சினத்தைத் தணிப்பதும் இவர்களுடைய வீர விளையாட்டாக இருந்தது. வாள் எடுக்காத நாள், இரத்தஞ் சிந்தாத நாள், பிணங்களைக் காணாத நாள், பிணக் குழிகளைத் தோண்டாத நாள், எப்போதாவது நகரில் விசேஷ திருவிழாக்கள் நடக்கும் நாளாகத்தான் இருக்க முடியும். ஆனால் மற்ற நாட்டு வீரர்களுக்கும் ரோம் நாட்டு வீரர்களுக்கும் மிகுந்த வேறுபாடு. மற்ற நாட்டார்கள் வெறும் இரத்த வெறி ஒன்றையே கொண்டலைந்தார்கள். ஆனால் ரோம் நாட்டு வீரர்கள் போர் வெறி கொண்டலைந்தது மாத்திரமல்லாமல் கலை, இலக்கியம், சட்டம், அரசியல் ஆகிய எல்லாவற்றையும் போரமளிக்கிடையே வளர்த்துக் கொண்டே வந்தார்கள். அதனாலேயே அந்த நாடு நாகரிகத்தின் தாய் என்றழைக்கப்பட்டது. ஆகவே மேலும் மேலும் வெற்றி மாதா வீற்றிருக்கும் அரியாசனத்தை உயர்த்த கால் நோக்கிப் படையெடுத்தான் சீசர். அந்த நேரம்தான் தக்க நேரமென்று கண்ட பாம்பே செனட் சபையை பலப்படுத்தினான். தனக்கு வேண்டியவர்களுக்கெல்லாம் பெரிய பெரிய உத்தியோகங்களை வழங்கினான். தனக்கு வேண்டாதவர்களும் சீசருக்கு வேண்டியவர்களுமானவர்களை தாக்கி அடக்கினான். அவன் வாய்ச் சொல்லே உத்தரவுகளாகவும் சட்டங்களாகவும் ஆயின. சீசருக்குப் பிடிக்காத ஒருவனை இராணுவ ஜெனரல் ஆக்குகிறான்... 

இதைக் கேட்ட சீசர் சிம்மமானுன். சிவந்த கண்களில் கனல் கக்கினுன். இவ்வளவுக்கும் காரணம், பாம்பே தன்னிஷ்டம் போல் நாட்டையாளுகிருன் என்பதல்ல. தனக்கு வேண்டிய வர்களுக்கு பதவிகளை யளித்தான் என்பதுமல்ல. ஆனுல் தானில்லாத நேரத்தில் தன்னை **நாட்டுத் துரோகி** என்று பகிரங்கமாகப் பிரகடனப் படுத்தினுன். பாம்பேவைக் கொன் ருல், தன் மகள் ஜூலியா கணவனற்ற கைம்பெண்ணுய் விடு வாள் என்றுகூட அவன் கவலைப்படவில்லை. பல வெற்றி களுக்குக் காரணமாயிருந்த தன்னையே துணிந்து துரோகி என்றழைக்கிருன். அவன் துணிவை யடக்கி நாவைத் துண் டிக்க வேண்டும். இறுதியாக கூலை வெற்றிகண்டு வீரசங்கு முழங்க ரோம் திரும்பும் வீரனைப் பார்த்துத்தான் நாட்டுத் துரோகி என்கிருன்.

"இவன் கொட்டத்தை யடக்கி, கூடுமானுல் கொலைக்களம் அனுப்ப வேண்டும். ரோம் அன்னையின் திருவடிகளில் எதிரி களின் நிழல் பட்டாலும் தாங்காது அரிமாவெனப் பாயும் அப் பழுக்கில்லாத வீரன் ஜூலியஸ் சீசர் நான். என்னைப் பார்த்து மடையன்; இல்லை, இல்லை வெட்கமில்லாமல் சொல்லிக்கொள்ள வேண்டுமானுல் என் மருமகன் பாம்பே என்னையே நாட்டு துரோகி என்கிருன். சே! சே! சகிக்க முடியாத அவமானம். அவன் தனியாக இருந்த போது கசடனுய், கல் நெஞ்சனுய் யிருந்திருக்கலாம். மாசற்ற மாவீரனும் இந்த ஜூலியஸ் சீசரின் அருமைத் திருமகளாம் ஜூலியாவின் கையைப் பிடித்த பிற காவது அந்த கயவனின் கள்ள நெஞ்சம் ஒழிந்திருக்கக் கூடாதா? என்னை நாட்டுத் துரோகி என்கிருன். எவ்வளவு மமதை அவனுக்கு. பார்க்கிறேன் ஒரு கை; என் மகளின் கண்ணீரிலேயே அந்தக் கயவன் பாம்பேயின் பிரேதத்தைக் கழுவுகிறேன்." என்று ஆவேசத்தோடு ரோம் நோக்கி வரு கிருன்.

கால் நோக்கிச் சென்ற சீசர் வெற்றிகளோடு ரோம் திரும்புகிருன் என்றறிந்த பாம்பே ரோம் நகரத் தலைவாயி லில் படைகளை நிறுத்துகின்ருன். அறுபது நாட்கள் போரிட்

டான் சீசர். தன் படையிலிருந்தோர் ஒருவராவது இரத்தஞ் சிந்தா வண்ணம் அறுபத்து ஓராவது நாள் ரோம் நகருக்குள் நுழைந்துவிட்டான். ரோம் நகரத் தலைவாயிலிலே ஜூலியஸ் சீசர் காலடி எடுத்து வைத்தான் என்று தெரிந்ததுதான் தாமதம். பாம்பே ரோமின் கடை வாயில் வழியாக ஓடினான். வெளியே பாம்பேயின் பெயரைக் கேட்டால் கடல் நடுங்கிற்று. மற்ற நாடுகள் மௌனம் சாதித்தன. அத்தகு வீரன் பாம்பே ஓடினான், ஓடினான்; கிரேக்கத்தின் ஒரு பகுதியாகிய பார்சேலியா சமவெளிக்கே ஓடினான். எனினும் சீசர் அவனை விட்டானில்லை

அங்கே மாமனும் மருமகனும் நேரடியாகச் சந்தித்தனர். முழுமூச்சோடு தாக்கும் சீசர் படைகளுக்கு முன்னால் நிற்க முடியாமல் உயிர் பிழைக்க எண்ணி ஒரு கூடாரத்திற்குள் நுழைந்தான் பாம்பே. வாளுருவி பின்னால் சென்றான் சீசர். அங்கிருந்து தப்பியோடி மறைந்தான் பாம்பே. வாளை உறை யிலிட்டு கை உதறித் திரும்பினான் சீசர். மறைந்தோடிய பாம்பே எங்கே? அவனோடு ஓடியவள் அவனுடைய மற்றோர் ஆசை மனைவி கார்னீலியா கணவனை விட்டுப் பிரிய முடியாத காதலால் கண்ணீர் வழிகாட்ட கணவனைப் பின் தொடர்ந்தாள். தனது நாவால் நாநிலத்தை யடக்கி யாண்ட பாம்பே நாவுலர ஓடுகிறான். கூப்பிட்ட குரலுக்கு குற்றேவல் புரியக் காத்தி ருந்த பலரை வைத்தாண்டவன் குறுகிய சந்துகளில் விழுந்து ஓடுகிறான். கால எல்லையின் கடைசிக்கே ஓடுகிறான். மின்னிய வாள் ஒளியை அவன் கண்ணீர் மறைத்துவிட்டது. வீழ்த்த முடியாத வீரன் மேல் வீண் பழி சுமத்திய வீணனே ஓடு ஓடு என்று சூழ்நிலைச் செப்புகிறது. அவனுடைய பரிதாபமான முடிவை சரித்திரப் பேராசிரியன் புளூடார்க் நடுங்கிய கைக ளோடு, உடைந்த மனதோடு எழுதுகின்றான். அந்த மாவீரன் பாம்பே தாயகத்தை விட்டு எகிப்து நாட்டில் தஞ்சமடைந்து அங்கும் அவனை ஏற்றுக்கொள்வாரற்று, சூழ்ச்சிக்காரர்களால் கொலையுண்ட சோக வரலற்றை எகிப்திலே காண்போம் வாருங்கள்.

## எகிப்து

கிழக்கும் மேற்கும் சந்திக்கும் இடம் எகிப்து. நைல் நதி முத்தாரமாய் வளைந்தோடும் அழகு நகர். மாசிடோனிய மாவீரன் படையெடுப்பில் அடங்காத காரணத்தால் அம் மாவீரன் பெயராலேயே அலெக்சாண்டரியா எனும் அழகு நகரைக்கொண்ட பூமி. மத சம்பந்த மில்லாத ஏராளமான நூல்களைக் கொண்ட நூல் நிலையம் ஒன்றை உடைய நகரம். அலெக்சாண்டரியா இறந்தவர்களின் நினைவுச் சின்னமாக பெராமிட் என்னும் கோபுரங்கள் வானளாவ நிற்கும் மண்டலம். அந்தக் கோபுரங்களை எழுப்பியதினாலேயே உலக ஏழு அதிசயங்களில் ஒன்றான நகரம். திராவிடத்தின் முத்தும், பவளமும், சந்தனமும், மயிர்ப் பீலியும், அங்காடிகளை அழகு செய்துகொண்டிருந்த தரணி. எகிப்து என்றால் நைல்நதி நினைவுக்கு வரும். நைல் நதியை நினைத்தால் அதன்மேல் தங்கப் படகிலே ஆரோகணித்துச் சென்ற பேரழகி கிளியோபாட்ராவின் பெயர் நினைவுக்கு வரும். கிளியோபாட்ரா என்று நினைக்கும்போதே டாலமி வம்சத்தரசர்கள் நினைவுக்கு வருவார்கள்.

பாம்பே பதுங்க ஓடிய எகிப்தில் அன்று அரசியல் கொந்தளிப்பு. எகிப்தை யாண்ட மன்னன் அலாட்ஸ் டாலமிதான் கிளியோபாட்ராவின் தந்தை. கிளியோபாட்ராவின் தந்தை இறக்கும்போது இவளுக்கு வயது பதினெட்டு. இவளுக்கு தங்கை ஒருவள், வயது பதினான்கு. அர்சினா என்ற பெயருடையாள். தம்பி இருவரில் மூத்தவன் பெயர் டாலமி. அவனுக்கு வயது பதினொன்று. அவனுக்கு இளையவன் ஒருவன்; அவனுக்கு வயது ஏழு. இந்த நால்வரை விட்டுச் சென்றான் அரசன் டாலமி.

## விசித்திர வில்

டாலமி அரசன் இறக்கும்போது தன் மக்களின் அரசுரிமை சம்பந்தமாக ஒரு வில் எழுதி வைத்திருந்தான். அதில் மூத்த மகள் கிளியோபாட்ராவும், மூத்த மகன் டாலமியும் நாட்டையாள வேண்டும் என்பது ஒன்று. மற்றொன்று, தன் மூத்த மகள் பதினெட்டு வயதுடைய கிளியோபாட்ரா, அவளுடைய

தம்பி பதின்ைகு வயதுடைய டாலமியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்பது. தமக்கை தம்பியைக் கட்டிக் கொள்வது கிரேக்க நாகரீகத்தில் தவருகவோ — டாலமி வம்சத்தின் மணவினையில் கேவலமாகவோ கருதப்படவில்லை. தமக்கை தம்பியைக் கட்டிக் கொண்டால்தான் தூய்மையான இரத்தக் கலப்பு இருக்குமென்று நம்பினுர்கள். எகிப்தைப் பொறுத்த வரையில் இந்த ஏற்பாட்டைக் கண்டு யாரும் அதிர்ச்சி கொள்ள மாட்டார்கள். ஆனுல் கிளியோபாட்ரா தன் தம்பியின் இளவயதுக் கஞ்சி திருமணம் செய்துகொள்ள மறுத்துவிட்டாள். டாலமி அரசன் இந்த வில்லை எழுதி முடித்தபோது ரோமில் பெரு வீரனுக விளங்கியவன் பாம்பே. அவனுக்கும் இந்த விவகாரம் தெரிந்திருக்கட்டும் என்ற காரணத்தால் பாம்பே யிடமும் அந்த வில்லின் நகல் ஒன்றைக் கொடுத்து வைத் திருந்தான். அந்த ஒரு தொடர்பினுலேயே, பயந்தோடிய பாம்பே நேராக எகிப்துக்குச் சென்ருன் என்று யூகிக்க வேண்டியிருக்கிறது.

கிளியோபாட்ரா — டாலமி திருமணம் நடைபெருது போகவே அரசுரிமையில் அவர்களுக்குள் போட்டியும் பொல் லாங்கும் சூழ்ந்து கொண்டது. இறுதியில் அது தீராத போராக முடிந்தது. ஒரு பக்கம் தமக்கையின் படைகள். மற் ருேர் பக்கம் தம்பியின் படைகள். அரண்மனை இரண்டாயிற்று. ஆட்கள் இரு பிளவாயினர். எந்த நேரத்திலும் தம்பி தன் னைக் கொன்றுவிடக் கூடும் என்று பயந்து கிளியோ சிரியா நோக்கி ஓடினுள்.

தமக்கையின் ஓட்டத்தைக் கண்ட தம்பி டாலமி பெரு நகை புரிந்தான். பிரபுக்கள் அவனை யாட்டி வைக்கின்றனர்— இனி பயமே இல்லையென எக்காளமிட்டான். பதினுன்கு வயது டாலமிக்கு இருந்தது ஒரே ஒரு எதிரி கிளியோ — அவளும் பயந்தோடினுள். ஜெயக் கொடி நாட்டி ஜெகமெங்கும் புகழ வாழ லாம் என்று நினைத்தான் தம்பி. ஆள் ஒன்று வந்தது அவ சரச் சேதியோடு; என்ன அந்தச் சேதி ? பயந்தோடிவிட் டாள் என்று நினைத்துக் கொண்டிருந்தானே கிளியோவை. அவள் ஒரு பெரும் சேனையோடு பெலுசியம் என்னும் இடத்

தில் வந்திருக்கிருள் என்ற செய்திதான் அது. திடுக்கிட்டான் டாலமி. கூடியிருந்த பிரபுக்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர்.

இது முடிந்தவுடனே மற்ரோர் செய்தியை வேரோர் ஆள் கொண்டு வருகின்ருன் ரோமாபுரியிலிருந்து. அதுதான் சீசரால் பாம்பே விரட்டப்பட்டதும், பாம்பே பார்சேலியா போர் முனையிலிருந்து தப்பி ஒருகூடாரத்துக்குள் நுழைந்ததும், அங்கேயும் அவனை விடாமல் சீசர் பின் தொடர்ந்ததும், அந்தக் கூடாரத்திலிருந்து தப்பி ஒரு வியாபாரக் கப்பலையடைந்து தன் மனைவியோடு சைப்ரஸ் தீவுக்கு சென்று அங்கிருந்து எகிப்து நோக்கி வந்து கொண்டிருப்பதும் அறிவிக்கப்பட்டன. இந்தச் செய்தி டாலமி கூட்டத்தாரிடையே திகிலையும் கலக்கத்தையும் சந்தேகத்தையும் உண்டு பண்ணிவிட்டது. "ஏன் பாம்பே எகிப்துக்கு வருகின்ருன் ? தெரியாது. தஞ்சம் புகவா ? அதுவும் தெரியாது. யாரிடம் ? அதுவும் தெரியாது. உதவி தேடவா, படைகளைச் சேர்க்கவா, பணம் கோரியா ? ஒன்றும் தெரியாது. ஒரு சமயம் கிளியோபாட்ரா அவனை வரும்படி அழைத்தாளா ? இருக்கலாம். ஒரு குரல், இருக்காது-பல குரல்கள் ஏன் இருக்காது ? – கேள்வி, கிளியோ நம்மைவிட யூகமறிந்தவள். இந்த நேரத்தில் அதாவது ரோமில் சிக்கல் நிறைந்த இந்த நேரத்தில் பாம்பேயை விருந்துக்குக்கூட அழைக்க மாட்டாள். உண்மைதான்." என்று இப்படிப் பேசிக்கொண்டிருக்கும் போதே, அலெக்சாண்டரியா துறைமுகத்திலே பாம்பே வந்திருக்கின்ருன் என்ற செய்தியும் டாலமி அரண்மனைக்கு எட்டி விட்டது. டாலமி அங்கில்லாததும் பெலூசியத்திலிருப்பதும் அறிந்த பாம்பே ஒரு ஆள் மூலம் தன் வருகையை டாலமிக்கு சொல்லி அனுப்பி விட்டு தான் கடல் மூலம் பெலுசியம் செல்கின்ருன்.

## பாம்பேயின் இறுதி

டாலமி சிறுவன்! ஒன்று மறியாதவன்! கிளியோவும் 18-வயதுடையவள்தான் என்ருலும் அரசியலைப்பற்றி அவ்வளவு தெரிந்தவளல்ல; மணவினை ஒன்று நிகழாத காரணத்தாலேயே தீராத பகைவர்களாக வாழவேண்டும் என்பதில்லை. ஆனல்

இவர்கள் பிரிந்து வாழ்வதில் லாபம் கண்ட சிலர் இவர்களின் விரோதத்தை விரிவுப்படுத்தினர். அந்தச் சிலரில் முக்கியமானவர்கள் எகிப்து மந்திரி சபையின் முதலமைச்சன் தோதிஞேஸ், படைத் தலைவன் அகில்லாஸ், டாலிமியின் மெய்க் காப்பாளன் சியோஸ். இந்த மூவர்தான் பாம்பேயைக் கொல்லவும் கூடும்; காப்பாற்றவும் கூடும். இந்தச் சண்டாளர்கள் கையிலே பாம்பேயின் இறுதிநாள் ஊசலாடிற்று. அவன் கீர்த்தியோடுவாழ்ந்த போது, அவன் பெயரைக் கேட்டாலே கொலை நடுக்கம் கொள்ளக்கூடிய இவர்கள் அவனை என்ன செய்யலாம் என்று முடிவுகட்ட கூடியிருக்கின்றனர். சிங்கத்தின் பாதையை சிற்றெறும்பு செப்பனிடுகிறது. ஞாயிறைத் திங்கள் நையாண்டி செய்கிறது. புலிக்குப் பூனை பாயக் கற்றுக் கொடுக்கிறது. வேங்கையை ஒரு நொண்டி தட்டிக் கொடுக்கின்றான் என்ருயிற்று நிலைமை. முடிவை சொல்லியனுப்பும் வரையில் பாம்பே கப்பலிலேயே இருக்கட்டும் என்று சொல்லியனுப்பி விட்டனர்.

செய்தி யறிந்ததும் ஓடோடி வந்து வரவேற்பான் டாலமி என்றல்லவா நினைத்திருப்பான் பாம்பே. அப்படி ஒரு காலம் இருக்கத்தான் செய்தது பாம்பேவுக்கு. ஆனல் அந்த வலிமை மிக்க நாளை பகைத்துக் கொண்டான். அந்த சுடர் மிகுந்த நாளாய்த் திகழ்ந்தவன் சீசர். அவனைப் பகைத்துக் கொண்டான். இவனே எல்லாம் என்றிருந்தான். எக்காலத்துக்கும் அழிய மாட்டோம் என்றிருந்தான். இவனுக்குப் பின் யார் என்ற கேள்வியையே இவன் எழுப்பியதில்லை. அந்த நிலை இன்று இவனை வேற்று நாட்டின் துறைமுகத்திலே உயிர்ப் பிச்சைக்காக கையேந்தி நிற்கச் செய்திருக்கிறது. கொடிய காலமெனும் பற் சக்கரங்கள் மெல்ல சுற்றத் தொடங்கிவிட்டன. அலைகளால் ஆடிக்கொண்டிருக்கும் கப்பலில் ஆயாச மிகுந்த மனத்தால் ஆடிக்கொண்டே நிற்கின்ருன் பாம்பே. பக்கத்திலே கர்லீனியா, இரண்டோர் பணியாட்கள்.

## பாம்பேயின் உயிர்மேல் விவாதம்

தீர்க்க முடியாத பிரச்சனை; சங்கடமான கட்டம். உள் நாட்டிலோ போர். அதுவும் குடிகளுக்கும் மன்னனுக்குமல்ல. அரசிக்கும், அரசனுக்கும். எகிப்து என்ன ஆகுமோ என்று

திகில் கொண்டிருக்கின்றார்கள் மக்கள். உத்தரவுகளைப் போட்ட வண்ணம் உள்ளது மந்திரி சபை. இந்த நெருக்கடியான நேரத்திலேதான் பாம்பே சீசரைப் பகைத்துக்கொண்டு வேற்றாளாய் ஓடிவந்திருக்கின்றான். பாம்பேயை ஆதரித்தால் சீசர் சீறுவான். ஆதரிக்காமல் விட்டாலோ கிளியோ பக்கம் சேர்ந்து கொள்வான். சீசர் பயமுறுத்தலுக் கஞ்சாது நம்மோடு சேர்த்துக் கொள்வதற்குத்தான் இவனிடம் இப்போது என்ன இருக்கிறது. பெரும் படையோடா வந்திருக்கின்றான்? வெறும் ஆள், அதுவும் உயிருக்கு பயந்து, ஏன் சீசரிடமே இவன் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அங்கேயே வாழ்ந்திருக்கக் கூடாதா — மேலும் அவன் இவனுக்குப் பெண் கொடுத்த மாமனார்தானே. என்று இப்படி எல்லாம் நெடு நேரம் பேசினார்கள்; விவாதித்தார்கள். முடிவேதும் ஏற்படவில்லை. கருணை சாய்ந்தது. இரக்கம் இடம்விட்டுப் பெயர்ந்து விட்டது. பெருந்தன்மை பேச மறுத்துவிட்டது. புலியென வாழ்ந்தான் பாம்பே. புல்லென மதித்தனர் புல்லர்கள். இறுதியில் டாலமியின் ஆசான் தியோடாடஸ் சியோஸ் ஏதோ ஒரு யோசனையைச் சொன்னான். புது கண்டுபிடிப்பு ஒன்றைக் கண்டு பிடித்த விஞ்ஞானிபோல் அனைவரும் குதித்தனர். "ஆம், ஆம், அதுதான் சரி", என்றனர் மந்திரிகள் என்று அழைக்கப்பட்ட மனிதர்கள்.

அந்த புனித கைங்கர்யத்தை செய்து முடிக்கும் பொறுப்பு அகில்லாஸ் வசம் ஒப்படைக்கப்பட்டது. அவனுக்குத் துணையாக இருவர் அவர்களை செப்டிமியஸ், சால்வியஸ் என்று ஏகிப்து மக்கள் அழைத்துக் கொண்டிருந்தார்கள். படகு ஒன்று தன்னை நோக்கி வருவதைக் கண்டான் பாம்பே. சந்தேகம் கொள்ளவில்லை ; சந்தோஷப்பட்டான். ஆழ்ந்த சிந்தையில் மூழ்கியிருக்கும் தன் அருமைக் காதலியைத் தட்டினான். "அதோ படகு !" என்றான். அவளும் பார்த்தாள். அவள் கண்களைக் குறி வைத்துப் பாயும் குண்டுபோல் படகும் வந்து கப்பலைத் தட்டி நின்றது. இறங்கிய வீரர்கள் இருவரும் இராணுவ மரியாதை செய்தனர். கடல் ஆழமில்லாத காரணத்தால் படகில் வாருங்கள் என்றழைத்தனர். அவர்கள் குரலில் தொனித்த கேலி பாம்பேயின் சித்தத்தைக் கலக்கி விட்டது. முடிந்து விட்டோம்;

இனி பிழைக்க மாட்டோம் என்று உறுதி செய்து கொண்டான். "கண்ணே கர்லீனியா!" என்று தழுவினன். கப்பல் தளமும் கடலென்ருயிற்று அவள் சிந்திய கண்ணீரால். திரண்ட தோள் களைத் தாவிப் பிடித்தாள். சக்தியற்று கீழே விழுந்தாள். "என் காவலனே! காதலனே!" என்று கதறி யழுதாள். "கண்ணே, அதோ காலம் தன் கைகளை விரித்து என்னைத் தாவுகிறது. அகி லத்தின் பல பாகத்தை வென்றிருக்கின்றேன். உண்மைதான், ஆனல் இந்தக் கொடிய காலத்தைக் கொல்லும் ஆற்றல் எனக்கு மில்லை. உனக்குமில்லை, வேறு எவனுக்குமில்லை. வருகிறேன்! நாளை எனக்குச் சொந்த மானதல்ல." என்று ஏதோ ஒரு சிறு புத்தகத்தைத் திறந்து படித்துக்கொண்டே போனன்.

இறங்கலாம் என்றது ஒரு குரல். மணலில் இறங்கி நின்ருன்; முதுகில் கட்டாரிப் பாய்ந்தது. அலறி வீழ்ந்தான்; அடியற்ற மரம்போல் சாய்ந்தான். கப்பல் முகட்டிலே நின்றுகொண்டிருந்த கர்லீனியா கண்டாள் இந்தக் கோரக் காட்சியை. பாம்பே இட்ட பேரிரைச்சலின் எதிரொலிபோல் கர்லீனியாவும் கதறிச் சாய்ந் தாள். கப்பல் புறப்பட்டு விட்டது-பாம்பேவை முதுகில் குத் தியவன் வேறு யாருமல்ல. ஒரு காலத்தில் பாம்பேயின் படையில் போர் வீரனுக பணியாற்றிய செப்டிமியஸ். வாள் விழுவதற்கு முன் எங்கே தப்பித்துக்கொள்ளப் போகின்ருனே என்று முன்னெச்சரிக்கையாக அகில்லாஸ், சால்வியஸ் இரு வரும் வாள் ஏந்தி நின்றனர். எனினும் அவர்களுடைய வாள் வீச்சுக்கு வேலையில்லாமலேயே உதிர வாயோடு மணல் வெளியில் வீழ்ந்துவிட்டான் பாம்பே. அரிமா சாய்ந்தது. அற் பர்கள் நகைத்தனர். மந்திரிகளுக்குக் காட்ட பாம்பேயின் தலையை மாத்திரம் தூக்கிச் சென்றனர். உடல் தூக்கி எறியப் பட்டு கடலலையில் அலைமோதிக் கொண்டிருந்தது. பாம்பேயின் நன்றியுள்ள பணியாள். பிலிப் என்பவன் அந்த சண்டாளக் கொலைக்காரர்கள் ஒழிந்தபின் தன் தலைவனின் தலையற்ற உடலை எடுத்தான். சுற்றிலும் கிடைத்த சுள்ளிகளையும் மரத் துண்டு களையும் பொறுக்கி எடுத்து தீ மூட்டினன். ஒரு காலத்தில் படைகள் புடை சூழநின்ற பேருருவம் நாதியற்ற பிணம்போல் வெந்து சாம்பலாகின்றது. எல்லோரும் இறுதியில் இப்படித்

தான் என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டு காலம் சிரித்த் முகத்தோடு செல்லுகின்றது. சரிதத்தின் சங்கொலியில் ஏற்றத் தாழ்விருந்தாலும், சாவின் சன்னிதானத்திலே அனைவரும் சமம் என்ற விசாரணை தோன்றி மறையும் மின்னலெனப் போய் விடுகின்றது.

பாம்பே பாரின் எந்தப் பகுதியிலே போய் மறைந்தாலும் விடுவதில்லை என்ற வீராவேசத்தோடு கிளம்பினான் சீசர். எகிப்து நோக்கி எதிரியைக் கைது செய்து ரோம் நகரக் கோட்டைக் கொடி மரத்திலே கட்டி அடிக்க வேண்டுமென்ற வெஞ்சினத்தால் ஒரு படையோடு எகிப்தை யடைந்தான். நைல்நதிக் கரையைச் சேர்ந்தான். எகிப்தின் "எந்த மூலையிலிருந்தாலும் பாம்பேவைக் கொண்டு வாருங்கள். கோட்டைக்குள் அவனை கிளியோ மறைத்து வைத்திருந்தாலும், அல்லது அவள் தம்பி பதினன்காவது டாலமி பாம்பேவுக்கு அடைக்கலம் தந்திருந்தாலும் விடாதீர்கள். சாதாரண ஜனங்களோடு அவன் சாதாரண உடையில் உருமாறித் திரிந்தாலும் விடாதீர்கள். எட்டுத் திக்கிலும் தேடி அந்த துட்டனை என்னெதிரில் கொண்டு வந்து நிறுத்த வேண்டும் எனப்படை வீரர்களுக்கு கண்டிப்பான கட்டளையிட்டான். சீசரின் நெஞ்சில் எரிந்து கொண்டிருந்த நெருப்புக் கொஞ்சமும் அணைந்தபாடில்லை. படைகள் பாம்பேவைத் தேடப் புறப்படுவதற்கு முன் சீசர் அலெக்சாண்ட்ரியாவுக்குள் நுழைந்து விட்டான் என்று அறிந்த டாலமியின் ஆசான் ஆனந்தக் கடலில் மூழ்கினான். எந்த பாம்பேவைக் கொல்ல சீசர் துடிக்கின்றானோ அந்த பாம்பேவை நாங்களே கொன்று விட்டோம் என்றால் பரிசு கிடைக்கும். புன்னகை புரிவான். வேண்டிய உதவிகள் செய்வான். உள் நாட்டில் தமக்கைக்கும் தம்பிக்கும் நடந்துக் கொண்டிருக்கும் போரில் இவன் பெருந்துணையாகக் கூடும். சீசர் யார் பக்கம் நின்று போராடுகின்றானோ அவர்கள் வெற்றி பெறுவது திண்ணம்" என்றெல்லாம் மனக்கோட்டைக் கட்டிக் கொண்டு தியோடாடஸ் என்பவன் ஒரு சிறிய மூட்டையோடு சீசரின் எதிரே வந்து வணங்கி நின்று மூட்டையை அவிழ்த்தான். அது பாம்பேயின் தலை. கண்டான் சீசர்; கதி கலங்கினான். கண்களிலே நீர் மல்

கிற்று. மெய் சிலிர்த்துவிட்டது. உடல் வேர்த்து விட்டது. "பார் நடுங்கப் போரிட்ட பாம்பே! உனக்கா இக்கதி ? எம்மைக் கண்டஞ்சிய இந்த எலிக் கூட்டத்தாலா கொல்லப் பட்டாய். ரோமானிய வீரன் ஒருவனைக் கொல்லும் ஆற்றலும் பெற்று விற்றதா எகிப்து ? ஆயிரமாயிரம் படைகளை நடத்திச் சென்ற உன்னையா இந்த மணற்பரப்பில் கொன்றுவிட்டனர்? கொடுமை! கொடுமை !! என் கண்முன் லட்சக்கணக்கான பிணங்கள் சுருண்டு சுருண்டு வீழ்ந்ததை நான் கண்ணாரக் கண்டிருக்கின்றேன். ஒரு துளி கண்ணீரும் சிந்தியதில்லை. என் தலைவ! இன்றோடு நின் கீர்த்தி குடத்திலிட்ட விளக் கொளியாயிற்றா ? டைபர் நதி வீரனே, மத்தியதரைக் கடலைக் கலக்கிய பெரும் புயலே! உன்னையா இப் புல்லர்கள் அழித்து விட்டனர் ? அந்தோ! பெரியவனே. ஆராத் துயரடைகின்றேன். நான் உனக்குப் பகைவனானேன். காரணம், நீ எனக்குப் பகைவனானதால். உண்மைதான் என்றாலும், நாம் இருவரும் ரோமானியர்களே! ரோமானியன் ஒருவன்மேல் கை வைக்கும் துணிவு இந்த எகிப்தியருக்கு உண்டென்றால், நமது வீரம் விலையற்றதாகிவிட்டதா ? நாம் பெற்றிருந்த நெஞ்சுத் திறம் நீர் மேல் குமிழியாயிற்றா ? சிங்கத்தை சிறு நரி கொல்லும் ஆற்றலில்லை எனினும் சிங்கம் அயர்ந்து தூங்கும்போது சிறு நரிகள் பல கூடி அதைப் பங்கப்படுத்திவிட்டதைப் போலாய்விட்டது. பாம்பேயைக் கொன்று விட்டால் நான் மகிழ்ச்சிக் கூத்தாடுவேன் என்று நினைத்த மடையனே! தியோடாடஸ்! என்ன துணிவு உனக்கு. எம் தலைவன் தலையைக் கொய்து என்னெதிரே கொண்டுவந்து காட்டும் துணிவு பிறந்து விட்டதா உனக்கு ? இந்தா உன் தலை" என்று சீசர் வாளெடுத்தான் — ஓடினான் தியோடாடஸ். மூச்சு நின்று போகும் வரையில் ஓடினான். மறைந்தே போய் விட்டான். பாம்பேயின் எலும்புகளை எடுத்து தக்க மரியாதைகளோடு தகனம் செய்ய அவைகளைச் சேர்த்து கர்லீனியாவுக்கு அனுப்பி வைத்தான். இந்த செயல், விரோதியென்றாலும் வீரனென்றால் வணங்கும் பண்பு சீசரிடமிருந்ததைக் காட்டுகிறது. நாட்டுப் பற்றும், தன் நாட்டான் ஒருவனை பிற நாட்டான் பகை முடிப்பதை சகிக்காதவனாக இருந்தான் என்பதையும், காட்டிக் கொடுக்கும் சுபாவம் கொஞ்சமுமில்லாதவன் என்பதை எவ்வளவு தெளிவாகக் காட்டுகிறது !

## ஜியூண்க்டில்லிஸ் (ஜூலை) திங்கள் 12-ம் நாள்

கி. மு. 102-ல் பிறந்த **சீசர்**, அவன் பிறந்த மாதத்திற்கு பிறகு அவன் பெயராலேயே ஜூலை என்றழைக்கப்பட்டது. பாம்பேயின் முடிவுக்குப் பின் வெளி நாடுகளில் பறந்த ரோமானிய கொடியைக் கட்டியவன் ஜூலியஸ் சீசர். பாட்ரீஷியன்கள் என்று சொல்லப்படும் பெருங்குடியில் பிறந்தவன் சீசர் என்றாலும் தன் அத்தையின் கணவன் மாரியஸ் காயஸ் என்பவனால் அமைக்கப்பட்ட ஜனநாயகக் கட்சியிலே இருந்தவன். காயஸ் இறந்த பிறகு அவன் கட்சியிலே இருந்தவர்கள் விரட்டப்பட்டனர் சல்லாவால். சல்லாவின் நோக்கம் ஜன நாயகக் கட்சியை அழித்தொழிக்க வேண்டுமென்பதுதான். சல்லா நினைத்தபடி எல்லாரையும் ஒழித்து விட்டான். ஆனால் சீசரை என்ன செய்வது ? சீசரை அவ்வளவு எளிதில் மடக்கி விட முடியாது.

தனது (சல்லா) தீராத பகைவனை மாரியஸ் காயஸ் மகள் கலிபூர்னியாவைத்தான் திருமணம் செய்து கொண்டிருந்தான் சீசர். அவளை மணவிலக்குச் செய்வதனால் மன்னித்து விடுவதாகச் சொன்னான் சல்லா.

எதிரிகளின் மிரட்டலுக்கோ பட்டம் பதவிகளுக்கோ ஏமார்ந்துவிடாத சீசர் தன் மனைவியை விலக்க முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டு, அதனால் எந்தவித அபாயத்தையும் சமாளிக்கத் தயாராக இருந்தான். கொள்கையையும் விடச் சொல்லுகிறான். கூடவே கைபிடித்த காதலியையும் கைவிடச் சொல்லுகிறான். சீசர் அன்பும் அறமுமறிந்த சுத்த வீரன் என்ற முறையிலே இவ்விரண்டு நிபந்தனைகளையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். எல்லையற்ற கோபம் கொண்ட சல்லா சீசருக்கு எவ்வளவு தொல்லைகள் தர முடியுமோ அவ்வளவையும் தந்து பார்க்க வேண்டுமென்று விரும்பினான். ஆனால் அந்த சூழ்ச்சி சீசரிடம் பலிக்கவில்லை. இதை முன்கூட்டியே தெரிந்து கொண்ட சீசர் ஒரு படையுடன் ரோம் நகரை விட்டு வெளியே சென்று காலத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

## சட்டமும் பயின்றான் ;
## சல்லாபச் சகதியிலும் வீழ்ந்தான்.

ரோட்ஸ் நகரத் தெருக்களிலே கம்பீரமாகத் திரிகிறான் ஓர் காளை. வேடிக்கை, விருந்து, மது, மாதர்கள் இதுவே அவனுடைய சிந்தனை, செயல் எல்லாம். பணத்தை அள்ளி அள்ளி வீசுகிறான். கன்னியரின் கடைக் கண்கள் அவன் பார்த்துப் பார்த்து சலித்துப்போன பழங் கதையாயிற்று. மதம் கொண்ட யானை மாமரத்தைப் பற்றி இழுப்பதைப்போல் தன் பலங்கொண்ட மட்டும் ரோட்ஸ் நகர போக போக்கியங்களை இழுத்துத் தன்வசமாக்கினான். கோப்பைக் கொரு மது, கொஞ்சுவதற்கு நாளுக்கோர் வஞ்சி, வேளைக்கோர் வனிதை! அப்பப்பா! அவன் ஆடிய ஆட்டம் ரோட்ஸ் நகர வரலாற்றிலே காணமுடியாது. சட்டம் கற்கப் போனான். காமாந்தகார சகதியில் வீழ்ந்தான். அறிவைத் தேடப்போன இடத்தில் ஆரணங்குகளின் அணைப்பில் காலம் கடத்திய அந்த கண்யவான் யார்? அவன்தான் ஜூலியஸ் சீசர்

அவனுக்கிருந்த ஆசை, தான் ஒரு பெரிய பேச்சாளியாக வேண்டுமென்பது. மேலும் சட்டம் பயின்று ரோம் ராஜ்யத்தை நல்வழிப்படுத்த வேண்டுமென்பது. ரோம் நகர ஆட்சி மன்றத்தில் வீற்றிருந்தோரனைவரும் பெரும்பாலும் சட்டம் பயின்றவர்களே. ஆகவே தானும் சட்டம் பயின்று அரசியல், சீர்திருத்தங்கள் செய்ய அவாக் கொண்டான். அவைகளைக் கற்கும் நோக்கத்தாலேயே ரோட்ஸ் நகரப் பேரறிஞன் அபோலோனியஸ் மொலோன் என்பவரிடம் சென்றான். அவரிடம் சீடனாக இருந்து பாடம் கேட்டான். அந்த நாளிலே தான் ரோட்ஸ் நகரின் பெரிய மைனராய்விட்டான். கட்டுக் கடங்காத செலவு, கைப் பொருளுமிழந்து பெரிய கடனாளியாய் விட்டான். எவ்வளவு கடன்? இருபது லட்சம் பவுன்கள். எதற்கும் அஞ்சாத தீரன் கடன்காரர்களைக் கண்டஞ்சினான். அவர்கள் தொல்லை பொறுக்க முடியவில்லை. தப்பியோட வழியில்லை. அவனை அங்கிருந்து அப்புறப்படுத்தும் உத்திரவு ஒன்று தானாகத் தேடி வந்தது ரோம் அரசாங்கத்திலிருந்து. அதில்

"ஜூலியஸ் சீசரே! உம்மை ஸ்பெயின் நாட்டு கவர்னராக் நியமித்திருக்கிறோம். உடனே சென்று பதவியை ஒப்புக் கொள்க" என்றிருந்தது. தொல்லை தீர்ந்தது. தொலைந்து போவோம் ஸ்பெயினுக்கு என்று மூட்டை முடுச்சுக்களைக் கட்டிக் கொண்டிருக்கிறான். தன் கைப்பட்ட காதலிகள் மேல் கடைசி கண் பார்வையாவது படவேண்டாமா? என்று அனை வரையும் ஒருமுறை பார்த்து விடை பெற்றுக்கொண்டு வீடு திரும்பினான். அங்கே ஒரு மனிதப் பட்டாளம் நின்று கொண்டிருக்கின்றது. ஓகோ, இவர்களனைவரும் நம்மை வழியனுப்பத்தான் கூடியிருக்கின்றார்கள் என்று நடையைக் கொஞ்சம் வேகமாக முடுக்கினான். அவர்கள் அவ்வளவு பேர்களும் கடன்காரர்கள். கலங்கினான் கலங்காத வீரன். "ஏ, வீராதி வீரனே! எங்கள் கடனைக் கொடுத்துவிட்டு நீர் ஸ்பெயினுக்கு கவர்னராகப் போகலாம். மைனர் விளையாட்டை மட்டுப் படுத்தி யிருந்தால் இந்த மண்டையிடி ஏனப்பா? தலை கால் தெரியாமல்ஆடினாயே, இப்போது அனுபவிப்பதுயார்? நீதானே! உம், நமக்கேனடா அந்தக் கேள்விகள் எப்படியோ போகிறான். அவன் இஷ்டம், நமக்கு வேண்டியது பணம். அதைத் தந்துவிட்டால் அவன் ஸ்பெயினுக்காவது போகட்டும், இத் தாலிக்காவது போகட்டும்" — இப்படி பலப் பல குரல்கள் பல பக்கங்களிலிருந்து கிளம்பின. நான்கு திக்கிலும் நாகம்போல் சீறிய அவன், இடியைக் கேட்ட நாகம்போலானான். செய்வதின்னதென்றறியாமல் திண்டாடித் தெருவில் நிற்கும் பரிதாபக் காட்சியைக் கண்ட நண்பன் கிராஸஸ் பண உதவிசெய்ய முன்வந்தான். பத்திரம் ஒன்று எழுதினான். அதில், சீசர் நல்ல நிலைமைக்கு வந்தால் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடவேண்டும். நல்ல பதவிக்கு வந்தால் அந்த பதவிகளில் தனக்கும் பங்கிருக்கவேண்டும் என்ற முடிவின் பேரில் பணத்தைக் கொடுத்து கடன்களைத் தீர்த்து சீசரையும் ஸ்பெயினுக் கனுப்பி வைத்தான்.

பிற்காலத்தில் பணமும் பதவியும் தனக்குக் கிடைத்த போது கிராஸசுக்கு எழுதிக் கொடுத்திருந்த பத்திர ஷரத்துப் படி நடக்க சீசர் தவறவில்லை. இந்த வாக்குறுதியை அவன்

எப்போது நிறைவேற்றினன் என்று பார்ப்போம். சீசரும் பாம்பேயும் இருவருமாகச் சேர்ந்து ரோம் நகரை யாண்ட போது கிராஸஸையும் சேர்த்துக் கொண்டு மூவராட்சியை ஏற் படுத்தினன். இவனுடைய போக்குப் பிடிக்காத ரோம் சர்க் கார் இவன் வைத்துக் கொண்டிருந்த படைகளைக் கலைத்து விடும்படி உத்திரவிட்டது. படைகளைக் கலைக்க மறுத்தான். அதன் காரணமாகவே பாம்பேயுக்கும் இவனுக்கும் பகை மூண் டதும், பாம்பே இவனைத் தோற்கடிக்க முடியாமல் பயந்து பார்சேலியாவுக்கு ஓடியதும், அங்கும் சீசர் துரத்த, கடல் தாண்டி எகிப்துக்கு ஓடியதுமாகும். அங்கேயும் அவனை விடக் கூடாதென்ற கோபத்தோடு எகிப்து நோக்கி ஓடிய சீசர் பாம்பேயின் வெட்டப்பட்ட தலையைக் கண்டு கண்கலங்கினன் என்று முன்பு சொன்னேம்.

இப்போது சீசர் அலெக்சாண்ட்ரியா அரண்மனையிலே தங்கி, கிளியோபாட்ராவுக்கும், அவள் தம்பி பதினன்கு வயது டாலமிக்கும் ஆள் அனுப்பினன். கிளியோபாட்ரா சாகசக்காரி என்பதும் சீசருக்குத் தெரியும். அவள் உடலிலே ஓடுவது முழுதும் கிரேக்க இரத்தம். ஏனெனில் கிரேக்க வம்சத்தில் தோன்றியவள்தான் அவள். அங்கே, அன்று வாழ்ந்த எகிப் தியர்களாகவும், எகிப்திய நாகரீகத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருந்திருக்கலாம். ஆனல் ஆட்சியின் பிடி முழுதிலும் டாலமி வம்சத்தாரிடமே இருந்தது.

## டாலமிகள் யார் ?

கிரேக்க மாவீரன் அலெக்சாண்டர் கி. மு. 332-ல் எகிப்தின் மேல் படையெடுத்து வென்றபோது அம் மாவீரனின் தள கர்த்தனும், நண்பனுமான டாலமி என்பவன் எகிப்தையாளும் உரிமையோடு முடிசூட்டிக் கொண்டான். அந்த பரம்பரையின் பதின்மூன்ருவது டாலமியின் மகள்தான் கிளியோபாட்ரா. ஆண வக்காரி. அரசியல் தெரிந்தவள், கண்டோர் மயங்கும் கட்டழகி, சட்டநுணுக்க மறிந்தவள். பெண் தோற்றம்; ஆண் உள்ளம். எகிப்து நாட்டு வரலாற்றின் வெறும் ஏட்டை பொன்னேடாக் கியவள் இவள்தான். டைபர் நதிக் கரை நாகரீகத்தை நைல்

நதிக்கரை நாகரீகத்தால் தொட்டவள் இவள்தான். ரோம் நாடும் கிரேக்க நாடும் எகிப்து நாட்டிலே சந்திக்கப் போகின்றது. சீசர் ஆள் அனுப்பியதற்கு இணங்கி டாலமி வந்து சேர்ந்தான். ஆனால் அலெக்சாண்டரியா அரண்மனைக்குள் சென்று சீசரை சந்திக்கும் தைரியம் அவனுக்குப் பிறக்கவில்லை. வெளியே நிற்கும் ரோம் வீரர்களைத் தன் வீரர்களால் விரட்டி யடிக்கின்றான் டாலமி. சீசருக்குச் செய்தி எட்டுகிறது. கேட்காதவன் போலிருந்தான். ஆனால் அவன் அந்த நேரம் கேளாக் காதனாய் இருந்தான். ஏன் ? அவன் சிந்தையெல்லாம் சிங்காரி கிளியோவின் திசை நோக்கிச் செல்லுகிறது. தான் வந்த உடனே தன்னை வரவேற்று தனக்குப் படை நல்கி தன் தமக்கையைத் தோற்கடிக்க உதவி புரிவான் சீசர் என்று பார்த்தான் டாலமி. அது முற்றிலும் வேறாக முடிந்தது. ஏனெனில் ; கிளியோ-பெண். தான் ஓர் ஆண். சீசர் பல மலர்களின் மது உண்ட வண்டு. அந்த வண்டு மலரை நாடுமா ? மனித வர்க்கத்திலே அதுவும் ஒரு ஆணாகப் பிறந்த டாலமியை நாடுமா! இந்த உண்மையை உணராமல் போய்விட்டான் டாலமி. வெளியே எவ்வளவு தலைகள் உருண்டாலும் கவலையில்லாமல் கிளியோவைக்காண வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு மாளிகையின் உப்பரிக்கையிலே பெலுசியம் நோக்கி நிற்கின்றான் சீசர். சீசர் அலெக்சாண்டிரியா அரண்மனையின் மாடியிலே - டாலமி வெளியே - கிளியோ பெசிலூயத்தில். இதற்கிடையிலே வாள் மின்னிக்கொண்டிருக்கின்றன. கேடயத்தைப் பிடித்தபடியே குருதியோடு குப்புரவிழும்வீரர்கள், பிணக்காடு, குருதி வெள்ளம். பச்சாதாபப்படுவான் பயந்தோடுகின்றான். அவன் பின்னாலேயே ஓடுகிறான். ஈவெனும் தேவதை இரக்கமென்னும் காற்றில் சாந்தி சமாதானம் தலையெடுக்காத அளவுக்கு சஞ்சலம் கூத்தாடுகிறது.

பெலுசியத்திலிருந்து அலெக்சாண்டிரியா கோட்டைக்குள் நுழைவதற்கு முன் வழியிலே பகைவர்கள் கண்டால் துண்டு துண்டாக வெட்டி எறிவார்கள் கிளியோவை. அவ்வளவு ஆவேசமாகத் தாக்குதல் நடந்துகொண்டிருக்கிறது. தங்கள் தலைநகரில் மாற்றான் ஒருவன் மந்தகாசமாகத் திரியும் இந்த நேரத்திலாவது தமக்கையும் தம்பியும் ஒன்று சேர்ந்து

எதிரியை விரட்டவேண்டுமென்ற வீர உணர்ச்சித் தோன்ற வில்லை. தமக்கை விரட்டப்பட்டால் நாடு நமக்குக் கிடைக்கும். இது டாலமியின் எண்ணம். தம்பி விரட்டப்பட்டால் நாடு மாத்திரமல்ல, நாயகனே தனக்குக் கிடைப்பான் - கிளியோவின் எண்ணம். இந்த ஆசைகளுக்குமிடையே சீசர், இந்த இடத் திலேதான் சரித்திர அலைகள் உண்மை அலைகளைவிட ஓங்கி அடிக்கிறது. எகிப்தின் எதிர்காலத்தை முடிவு கட்டும் நாள் கிரேக்க வம்சத்தாரான டாலமிகளே ஆள்வார்களா? அல்லது கால்போல் இதாலியைப் போல், பிரிட்டன்போல், பாலஸ் தீனம்போல், ஆசியா போல், கிரேக்கத்தைப்போல் எகிப்து ரோமுக்கு அடங்குகிறதா? என்ற கேள்வி எழுந்த வண்ணம் இருந்தது.

இந்தச் சிந்தனையிலே ஆழ்ந்த வண்ணம் உலவிக் கொண்டிருந்த சீசருக்கு முன்னால் ஒரு மூட்டையோடு வந்து நின்றான் அபோலோ டிராஸ்.

மூட்டையின் கட்டவிழ்த்தான், ஒரு முழுமதி வெளியே வந்தது! "கண்ணே, கிளியோ; நீயா?" என்றான். கரங்கள் நீண்டன! கண்ணீர் உகுத்தாள். "ஆனந்தக் கண்ணீரா?" என்றான். "இரண்டுந்தான்" என்றாள் எழிலரசி. "ஏன்?" என்றான் ஆச்சரியத்தோடு ரோமாபுரி வீரன். "ஒரு கண்ணில் வரும் நீர் ஆனந்தக் கண்ணீர். அது உம்மைக் கண்டதால் பெருகிற்று. மற்றொரு கண்ணில் துயர நீர்." "துயரமா, துக்கமா, எதற்காக?" என்று கேட்டான். எகிப்தின் ராணி ஒரு மூட்டையாக வந்தேனே என்பதற்காக" என்றாள் அவள். "கவலைப்படாதே. சில நேரம் வீரம் பயன்படுவதில்லை; விவேகம் பயன்படும்."

"ஆம். அதை எண்ணித்தான் இப்படி வந்தேன். இல்லை யானால் பாம்பே ..." என்றவுடன் சீசர் 'கலகல'வென கண்ணீ சிந்தினான். திகிலும் ஆச்சரியமும் கொண்டவனான்.

"சீசர்! என் கண்ணாளா. உமது கண்களிலுமா நீர்." "கிளியோ மறுபடியும் எங்கள் மாபெரிய தலைவனுடைய பெயரை உச்சரிக்காதே! அவர் உங்கள் விரோதியல்லவா? ஆம், எனக்கு விரோதி என் நாட்டைக் கடக்கும் வரையில். உன் நாட்டில்

அவன் நுழைந்தபின் அவன் என் விரோதியல்ல. உன் தம்பியே என் தீராத பகைவன். பகை முடிக்கப் போகின்றேன். உன் அன்பின் சாட்சியாக வாள் எடுத்து விட்டேன். இதோ!" என்று வாளை சுழற்றக் காட்டினான். தான் ஆடாவிட்டாலும் தன் சதையாடும் என்ற முதுமொழிபோல் தன் தம்பிக்கு வரப் போகும் கேட்டை எண்ணி அசையாத கற்சிலைபோல் நின்றாள் கணநேரம். "கிளியோ, கிளியோ! அஞ்சாதே! நான் உன் தம்பியைக் கொல்லமாட்டேன். இது நான் அவன்மேல் கொண்டு இருக்கும் கருணையாலோ, அல்லது உன்மேல் கொண்டிருக்கும் காதலாலோ அல்ல, அவன் கோழை. கோழையை வீரன் துரத்த மாட்டான். அவன் நடமாடும் பிணம். செத்த சவத்தை சிங்கம் தொடாது. காலம் அவனைக் கொன்று விடும். தஞ்சம் புக வந்தவனை வஞ்சகமாய் வீழ்த்தினான். அஃது ஒன்றே அவன் கோழைத் தனத்தைக் காட்டுகிறது. நான் அவனை மன்னித்து விடலாம். ஆனால் குருதிச் சிந்திச் சிந்தியே சிவப்பேறியிருக் கும் ரோம் நகர மண் அவனை விடப்போவதில்லை. ரோம் நகர தளபதி ஒருவனை அயல் நாட்டான் சாதாரண நேரத்தில் சாய்த் தான் என்று சஞ்சலமான ஏடு ஒன்றை உண்டாக்கியவன் இந்த சமுக்கன். ஏன், உன்னிடம்தான் அவன் கருணைக் காட்டினானா? நீ வயதில் மூத்தவள். அவன் இளையவன். உன்னைச் சிறிது நாட்கள் இந்நாட்டை ஆளவிட்டிருக்கலாமே. அலெக்சாண்ட்ரியா கோட்டை வெளியே அவன் என் படைகளை வெட்டி வீழ்த்திக் கொண்டிருக்கும்போது நான் வாளாயிருந் தேன். ஏன்! எதை செய்கிறோம் யாரிடம் மோதுகிறோம் என்று அறியாமலே செய்கிறான். ரோமானியப் படைகளிடம் இடையிடையே தற்காலிக வெற்றி பெறலாம் அவன், ஆனால் நிரந்தரமான கடைசி வெற்றி ரோமானியர்களுக்குத்தான் என் பதை பல நாடுகளில் பறக்கும் எங்கள் கொடியை பார்த்தாவது உன் தம்பி உணர்ந்திருக்க வேண்டும். காலம் அவன் கண்களை மறைக்கிறது. ஏன் தெரியுமா? கல்லறைக்குக் கொண்டு போக என் வீரர்கள் துடிக்கிறார்கள் என்றபோதும் நான் மௌனமாக உன் வழிமேல் விழி வைத்திருந்தேன். கண்ணே கிளியோ! தம்மை யறியாமல் நாம் எங்கேயோ சென்றுக்கொண்டிருக் கிறோம். நாம் செல்லும் பாதை உனக்காவது புலப்படுகிறதா?"

"இல்லை குணளா, எனக்கும் புலப்படவில்லை. உள்ளம் என்னமோ செய்கிறது என்று தொட்டாள். தொட்டான். துவண்டாள். தாங்கினன். பெரு மூச்சோடு பிரிந்தனர் நெடு நேரத்திற்குப்பின். பொழுதும் புலர்ந்து விட்டது.

அது நாள்வரையிலும் அலெக்சாண்ட்ரியா அரண்மனையில் தனிப் புருவாகத் திரிந்த கிளியோ ஜோடிப்புருவை சேர்த்துக் கொண்டாள். அப்போது சீசருக்கு வயது ஐம்பத்திநான்கு. கிளியோவுக்கு வயது இருபத்திரெண்டு. சீசர் கிளியோவைத் தொட்டது. அரசியல் வாரிசுக்காகவோ, அல்லது Platonic Marriage என்கிருர்களே அந்த முறையிலுமல்ல, உண்மை யாகவே காதல் உணர்ச்சியால் உந்தப்பட்ட சீசர் என்ற இரும்பு கிளியோ என்ற காந்தத்தால் இழுக்கப்பட்டது. அரண்மனைக் குள்ளே அணைப்பு, ஆடல், பாடல், விருந்து, வேடிக்கை, இருவரும் இணைபிரியாதிருந்தனர்.

ஆனல் வெளியே உள்நாட்டுப் போர் நடந்த வண்ணம் இருந்தது. சீசர் படைகள் ஒருபக்கம், கிளியோவின் படைகள் ஒருபக்கம் டாலமியின் படைகளை இடைவிடாது தாக்கின. சீசரை இனி போர்க்களத்தில் காணமுடியாது. போக பூமியிலே புரள்கிருன். வாள் எடுக்க மாட்டான். காதலியின் தோள் தாவி நிற்கின்ருன். அவன் சூரியனுனன்; அவள் சுடரானுள், அவன் திங்களானுன்; அவள் தண்ணொளியானுள். அவன் வீணையானுன்; அவள் நாதமானுள். அவன் மலரானுன்; அவள் மணமானுள். புவியே இரண்டு பிளவானுலும் இவர்கள் பிரியாதவராயினர். சீசர் இதைப்போன்ற விருந்துகளை சுவைக்காதவனல்ல. எனினும் இளமைத் ததும்பும் எழில் மிக்க எகிப்து ராணி, வாடாத மேனி, கசங்காத மலர், மரத்திலிருந்து வீழாத கனி, வேற்ருர்கைப்படாத கன்னி. கிரேக்கக் குருதியும் ரோம் இரத்தமும் நைல் நதியில் கலந்து விட்டது. சுவைத்தான். உள்ளம், உடல், உணர்ச்சி, உத்வேகம் எல்லாம் சோர்ந்து போகும் வரையில் சுவைத்தான். சிங்கம் ஒன்று மானின்முன் விளையாடிக்கொண்டிருக்கிறது. வெளியே மரணப்போர். உள்ளே போகப் போர். அவன் இதுவரை வென்ற நாடுகளில் காலடி எடுத்து வைக்கும்போது, கொடியேற்று விழா நடத்தும்போது,

புதிய பிரகடனங்கள் வழங்கும்போது, இவளை அந்த மக்கள் பல விருதுகளோடு வரவேற்றபோது, வேற்று நாட்டுப் பாராளு மன்றத்திலே வீற்றிருந்தபோது, 'காலை' வென்று விட்டுத் திரும்பியபோது தட்டிக் கொடுத்தத் தன் அன்னையைக் கண்ட போது எவ்வளவு சந்தோஷப் பட்டானே அதற்கதிகமாகவே குதூகலக் கடலிலே ஆழ்ந்து விட்டான். கிளியோவின் இந்த இணக்கத்திற்கு என்ன உள் வெளி காரணங்களிருந்தாலும் அவள் தன்னை பரிபூரணமாக சீசரிடம் ஒப்படைத்து விட்டாள் என்பது மட்டிலும் உண்மை. இனி ஒருவரை ஒருவர் வஞ்சிக்க முடியாமல் வாஞ்சையெனும் உலகில் நுழைந்து விட்டனர்.

இந்த நிலையிலே கோட்டைக்கு வெளியே, "அடி, பிடி, விடாதே, பிடி, பிடி, தப்பித்தோடுகிறுன்; தலையை வெட்டு, தலையை அப்புறம் வெட்டலாம்; முதலில் காலை வெட்டு, அவன் ஓட முடியாமல் விழட்டும்" என்ற குரல் பலமாகக் கேட்டுக் கொண்டிருக்கின்றது. இப்படி எல்லாருடைய கவனத்தையும் இழுக்கக் கூடிய முறையில் ஓடுகின்றவன் யார்? அவன் தான் எகிப்து நாட்டின் எதிர்கால மன்னன் என்று கனவு கண்டு கொண்டிருந்த கிளியோவின் தம்பி பதினுலாவது டாலமி. பயந்தோடிய அவன் பாய்ந்தான் ஒரு சிறு படகில்; ஏற்கனவே அதில் எண்ணற்றோர்! கனம் தாங்காத கலம் கடலில் மூழ்கியது. டாலமியை துணைக் கழைத்துக்கொண்டு கடல் மூழ்கியது கலம். டாலமி வம்சத்தின் கடைசீ ஏடு கடலில் கரைக்கப்பட்டு விட்டது. காதலர்கள் இருவரும் களிப்புக் கடலிலே மூழ்கி யிருந்தவர்கள்; கவலைக் கடலிலே சிறிது நேரம் மூழ்கி வாழ்க்கையின் இறுதி இதுதான்; புவியாளும் மன்னனுயினும் இறுதியில் பிடி மண் என்று பேசி ஆறுதலடைந்தனர்.

அவர்கள் அனுபவித்த இன்பத்தின் சின்னமாக ஓர் ஆண்டுக்குப் பிறகு, இல்லை, இல்லை, ஓராண்டிலேயே ஒரு ஆண் மகவு பிறந்தது. குட்டி சீசர் தோன்றிவிட்டான். இனி [illegible] எல்லையை விரிவு படுத்த வேண்டும். இந்த இ[illegible]த்தில் நமக்கு வேருேர் நிகழ்ச்சி நினைவுக்கு வருகின்றது. யாராலும் அடக்க முடியாத பூஸிபாலஸ் என்ற குதிரை[illegible] கிரேக்க வீரன்

அலெக்சாண்டர் அடக்கினுன். தன் மகன் வீரத்தைக் கண்ட பிலிப், "மகனே! உன் வீரத்திற்கு என் வசமுள்ள இந்த சிறிய நாடு போதாது-இன்னும் விரிவுபடுத்த வேண்டும்" என்று சொன்னுனும். அதேபோல் சீசரும் தனக்கு ஆண் மகன் பிறந்தான் என்றவுடன் நாட்டை விரிவுபடுத்த எண்ணினுன் போலும். அந்த எண்ணம் அவனுக்கு வருவதற்குக் காரணம் இல்லாமலுமில்லே. அவன் கிளியோ பாட்ராவோடு குலவி வாழ்ந்த நகரத்தின் பெயரே அலெக்சாண்டரின் வெற்றிச் சின்னமாக விளங்கியது தான். அது மட்டிலுமல்ல, அந்த மாசிடோனிய மாவீரன் சிலே ஒன்று சமைக்கப்பட்டிருந்தது. அதைக் கண்டு கீழ் வரும் வாசகங்களேச் சொல்லிக் கொண்டே பொருமைப்பட்டவன் தான் சீசர்.

" வீர அலெக்சாண்டரே! உம் சிலேயைக் காண புளகாங்கிதமுறுகின்றேன், ஏன்? பொருமைக் கூடப்படுகிறேன். ஏன் தெரியுமா? தங்கள் முப்பதாவது வயது முடிவதற்குள்ளாகவே மண்டலத்தை வென்றீர், நான் அந்த வயதுடையவனுக இருந்த போது பட்டாளத்தில் சேர்ந்து பணியாற்றினேன். இப்போது எனக்கு வயது ஐம்பத்து நான்கு என்ருலும் நீர் முப்பதில் அடைந்த புகழை நான் ஐம்பத்து நான்கிலும் அடைய முடியவில்லே." என்று சொன்னவன் தான். ஆகவே அலெக்சாண்டரின் வாழ்க்கை வரலாற்றை யுணர்ந்த சீசர் அலெக்சாண்டரின் தந்தை பிலிப் சொன்னதையே தனக்குப் பிறந்த மகனுக்கும் சொன்னுன்.

## இப்போது ரோம்

பாம்பே கொல்லப்பட்டான். சீசர் சிற்றிடையாளின் பிடியிலே எகிப்தில். ரோமில் தக்கத் தலேவர்கள் யாருமில்லே. உள் நாட்டில் கலகம். குடி உரிமை கிடைக்காத மக்களின் குட்டிக் கலகங்கள் ஆங்காங்கே தோன்றி விட்டன. ஓராண்டு காலம் ரோம் கேட்பாரற்ற நாடாய்க் கிடந்தது. எந்த வெளி நாட்டாரும் துணிந்து உள்ளே புகலாம். எனினும் அந்தத் துணிவு யாருக்கும் பிறக்கவில்லே.

ஆகவே, இனி அரசியலேக் கவனிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு புறப்பட்டு நேராக ஆசியா மைனருக்குப் போய்,

அங்கே தன் பகைவனும், பாம்பேயின் தோழனுமான ஒருவனைத் தோற்கடித்து விட்டுத் தாயகம் திரும்புகின்றான். தாயகத்தில் அவன் எதிரிகள் அவனை எதிர்ப்பதற்காகப் படைகளைத் திரட்டிக் கொண்டிருப்பதை யறிந்தான். இது ஒரு சிறு புயல், அடக்க முடியும் அவனால். அவன் கண் பட்ட இடங்கள் எதுவும் அடி பணியாமல் போனதில்லை. கால் பட்ட இடம் சரணாகதி என்று அர்த்தம்.

(Veni Vici Vidi)

வந்தேன், கண்டேன், வென்றேன்.

இதுவே அவன் போர்க்களத்தில் குதித்த நாள் முதல் இறுதி நாள் வரை மெய்ப்பித்துக் காட்டிய உண்மைகள். தோல்வி என்ற சொல்லே அவன் அகராதியிலில்லாமல் அழிந்து விட்டது. ஆகவே தான் உள் நாட்டில் இருக்கும் எதிர்ப்பை அவன் துரும்பென மதித்தான். ரோமாபுரிக்குள்ளே நுழைந்த வுடன் எதிர்ப்பைக்காலால் மிதித்துத்தேய்த்துவிட்டு ஆப்பிரிக்கா சென்று அங்கு பல நாடுகளை வென்று விட்டுத் திரும்பினான். பகிரங்கமாக இருந்த எதிர்ப்புகள் ஒருவாறு அடங்கிற்று. ரோமாபுரியின் கௌரவத்தை, செல்வாக்கை, செல்வத்தை ஒன்றுக்குக் கோடியாக்கினான். மக்கள் மகிழ்ந்தனர். சரிதத்திலே யாரும் சாதிக்காத வேலையை சாதித்துக் காட்டினான்.

இவனே தலைவன்

இவன் வெற்றிகளைக் கண்ட ரோமாபுரியினர் இவனையே பத்தாண்டுகள் தலைவனாக இருக்க வேண்டுமென்று விரும்பினர். தான் பட்ட கஷ்டங்களின் பயன் கைமேல் கிடைத்து விட்டதாக எண்ணிக் களித்தான். தான் ஒரு தெய்வக் குடும்பத்திலே பிறந்த வன் என்ற எண்ணமும் நாளுக்கு நாள் வளர்ந்தது. தன்னை ஒரு சக்கரவர்த்தி (Imperator) என்று வெளிப்படையாகச் சொல்ல வில்லையே யன்றி உள்ளூர எண்ணிக்கொண்டான். சீசரின் சிலைகளுக்கடியிலே, (to the unconquerable God) வீழ்த்த முடியாத கடவுள் என்று எழுதப்பட்டதும் அதனாலே தான். முடியரசை ஒரேயடியாக வீழ்த்திக் குடியரசை உண்டாக்கிய மக்கள் மீண்டும் தங்களை யறியாமலே பூஜா உணர்ச்சிக்கு அடிமையானார்கள்.

சீசர் குடியரசுத் தலைவன் என்ற நிலையற்று சர்வாதிகாரி யானதும் தங்க சிம்மாதனத்திலே அமர்ந்துதான் ஆட்சியை நடத்தினான். என்றாலும் அவன் மன்னன் அல்லவாம்.

ஓராண்டுக்கொரு முறை மாறிக்கொண்டு வந்த தலைமைப் பதவியின் காலமெல்லாம் போய் பத்து ஆண்டுகள் சீசரே சர்வாதிகாரி என்று பிரகடனப்படுத்துவதற்காக சீசரை நன்றாக அலங்கரித்த தேரிலேற்றி முக்கிய தெருக்களின் வழியாக ஊர் வலமாக அழைத்துச் செல்கின்றனர். ஊர்வலத்தில், முன்பு பாம்பேயோடு சேர்ந்து கொண்டு தன்னை எதிர்த்தவர்களையும் மற்ற எதிரிகளையும் சங்கிலியால் பிணைத்து இழுத்துச் சென்றனர். அதோடு நிற்கவில்லை மக்களின் ஆரவாரம். எகிப்தில் கிளியோவுக்கு தொல்லை கொடுத்த கிளியோவின் தங்கை அர்சினுவையும் சங்கிலியால் பிணைத்து இழுத்துச் சென்றனர்.

## காண்கின்றாள் கிளியோ

தன்னை பத்து ஆண்டுகள் சர்வாதிகாரியாக்கப் போகின்றார்கள் மக்கள் என்றறிந்த சீசர் எகிப்தில் இளஞ் சீசரோடு (குழந்தை) கொஞ்சிக் குலவிக் கொண்டிருந்த கிளியோ பாட்ராவை ரோமுக்கு வந்து-தான் அடையப் போகும் பெருமையைக் காணும்படி அழைத்திருந்தான். காதலனைப் பிரிந்து ஓராண்டாகக் கவலையிலிருந்த கிளியோவுக்கு சீசர் விட்ட அழைப்பு கனிரசமாயிற்று. ஓராண்டு சீசரைத் தூக்கிக்கொண்டு ஒன்பது ஆறுண்டுகளான சீசரைக் காணப் புறப்பட்டாள். அவள் தங்குவதற்காக, டைபர் ஆற்றங்கரையிலே ஒரு அழகான மாளிகையை நிர்மாணித்தான். சீசரின் ஊர்வலத்தைக் கண்ணாரக் கண்டாள். அதில் தன் தங்கை இரும்பு சங்கிலிகளால் பிணைத்து இழுத்துச் செல்லப்படுவதையும் கண்டாள். தன் தங்கையின் நிலை கண்டு பெருமூச்சு விட்டாள். தலைவனின் பெருமை கண்டு பெருமிதமும் பூரிப்பும் கொண்டாள். சீசர், ரோமின் தந்தை, தலைவன், சட்டமியற்றுவோன், எதிரிகளை சாகடிப்போன், எதிர்ப்பை அடக்குவோன், எல்லாம் அவனேயானான்.

பாம்பே கொல்லப்பட்ட நாட்டாள் ஒருவள் தன் நாட்டுத் தலைவனின் காதலியாயிருக்கிறாள் என்பதை எண்ணி ஏற்கனவே ஆத்திரமடைந்திருந்த மக்கள், இன்னும் அவள் டைபர்

நதிக் கரையில் கட்டப்பட்ட மாளிகையில் எல்லா வசதிகளோடும் வாழ்கின்றுள் என்பதைப் பார்த்த மக்களுக்கு ஆத்திரம் அதிகமாகத்தான் இருந்தது. என்றுலும் சீசரை இதைப்பற்றிக் கண்டிக்கவோ, அல்லது கிளியோவுக்கு தொல்லே தரவோ முடியாதவர்களாய் விட்டார்கள். அந்த அளவுக்கு சீசரின் கை ஓங்கியிருந்தது. ஆகையாலேதான் பகிரங்கமாக தோன்ற வேண்டிய பகை நீர் பூத்த நெருப்பாயிற்று.

அரசியல் யூகமறிந்த கிளியோ எந்தவிதமான உள்நாட்டு அரசியலிலும் தலையிடாமல், வேளேக்கொரு விருந்து, நாளுக்கொரு வேடிக்கை, சதா தன் காதலன் பக்கத்தில் என்ற நிலேமையிலே காலத்தைக் கடத்தி வந்த அவளுடைய ஆராய்ச்சி எல்லாம் ஒரு விருந்துக்கு ஒரு சீமாஞல் எவ்வளவு அதிகமாக பணம் செலவழிக்க முடியும்—அதை கேவலமாக்க தான் எவ்வளவு பணம் செலவழித்தால் தான் வைத்த விருந்து மேலாகத் தோன்றும் என்ற ஒரே ஒரு கவலேதான் அவளுக்கு. டைபர் நதியின் வெள்ளங் கூட கொஞ்சம் மெதுவாக ஓடியிருக்கும்; அதைவிட வேகமாக ஓடிற்று இவள் கைப்பணம். லட்சக்கணக்கான ரூபாய் பெரும்படியான முத்து ஒன்றை மதுபானத்தில் போட்டுக் குடித்து விட்டாள் என்றுல் பாருங்களேன்! அந்த விருந்துக்கு எவ்வளவு செலவாகியிருக்குமென்று! அவ்வளவு ஆடம்பரக்காரி. இந்த நிலே இவளுக்கு சீசரின் நேசம் கிடைத்த பிறகா வந்தது இல்லே, இல்லே. அவள் ஏற்கெனவே எகிப்தின் ராணியல்லவா!

ஏற்கெனவே சீசருக்கு கலிபூர்னியா என்ற ஒரு மனேவி இருந்தாளல்லவா, அவளேயும் சீசர் கைவிடவில்லே. எப்போதாவது சீசரும் நண்பர்களும் மிதமான போதையிலிருக்கும் போது, ஒரு தாரம் இருக்க மறுதாரம் ஏன் என்று வேடிக்கையாகக் கேட்பார்களாம். கலிபூர்னியாவிடம் குழந்தை பிறக்கவில்லே, கிளியோபாட்ராவிடம் குழந்தை பிறந்தது என்று சிரித்துக்கொண்டே சொல்லுவாஞம் சீசர். ரோமாபுரிக்கு அவன் கொண்டு வந்து குவித்த வெற்றிகளால் குதூகலமடைந்த மக்கள் "சீசரே உயிருள்ள வரையிலும் எங்கள் தலேவர்" என்று வாயாரப் போற்றிஞர்கள்.

தூற்றலும் ஒரு பக்கம் கிளம்பாமலில்லை. கிளியோ என்று டைபர் நதிக் கரைக்கு வந்து சேர்ந்தாளோ அன்றே ரோமா புரிக்கு பிடித்தது பீடை என்றனர். ஏன் தெரியுமா? ரோம் ரத்தம் பெற்ற கலிபூர்னியாவுக்கும் சீசருக்கும் குழந்தை பிறக்க வில்லை. எகிப்துநாட்டு இராணியும் கிரேக்க ரத்த ஓட்டத்தை யும் பெற்றிருக்கிற கிளியோபாட்ராவுக்கும் ரோமானிய வீரன் சீசருக்கும் குழந்தை பிறந்திருக்கிறது. சீசருக்குப் பின் எவ்வளவு பயங்கரமான சூழ் நிலைகளையுண்டாக்கப் பிறந்திருக்கின்றதோ, இந்தக் குழந்தை. புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? அழகான அலெக்சாண்டரியா அரண்மனையிருக்க ஏன் ரோமுக்கு வந்தாள். ரோம் அரசியலின் தட்ப வெப்ப நிலை யறிந்து கொள்ளத்தான். ஏதோ விபரீதம் விளையப் போகின்றது. சீசர் அவளுடைய கட்டுக்கடங்காத காதலில் கட்டுண்டு கிடக்கிறான். அவளைப்பற்றி எது சொன்னாலும் அவன் காதுகளில் ஏறுது. சொல்பவர் உதைக்கப்படுவர். அந்த அளவுக்கு மோகம் தலைக்கேறி அவள் மடியிலே கிடக்கின்றான். எவ்வளவோ கஷ்டப்பட்டு, எவ்வளவோ இரத்தம் சிந்தி எத்தனையோ பிணங்களைக் குவித்து முடியாட்சியை ஒழித்தோம். மீண்டும் ஒரு முடியாட்சித் தோன்றி விடுமா? நாளை எகிப்து எதிர்த்தால் சீசர் ரத்த பாசத்தால் சித்தம் சோர்ந்து விடுவானு? அல்லது செறுகளம் செல்வானு? எதிர்காலம் இருண்டு கிடக்கிறது. சீசருடைய இன்றைய நிலைமை தெரியாமல் அளவற்ற அதிகாரங்களை அவன் காலடியிலே கொண்டு குவிக்கின்றனர். என்ன விபரீதத்திற்கோ தெரியவில்லை. என்றெல்லாம் மூலைக்கு மூலை பேசினர். கம்பீரமாக கனகாசனத்தில் வீற்று மத்திய தரைக்கடல் தொடங்கி வட ஐரோப்பா முழுதும் வென்ற களிப்புக் கூச்சலில் மக்கள் கூச்சல் காட்டுக் கூச்சலாயிற்று.

என்றுலும், என்றே ஓர் நாள் ரோம் சாம்ராஜ்ய அரசியலில் புயல் வீசத்தான் போகிறது. கடல் கொந்தளித்துக் கரையை உடைக்கத்தான் போகிறது. தூங்கும் எரிமலை என்றுவது ஓர் நாள் வெடிக்காமலிருக்கப் போவதில்லை என்ற சூழ்நிலை உருவாகிக் கொண்டிருக்கின்றது. சீசர் பெற்றிருக்கும் அதிகார போதையில் இந்த எதிர்ப்புகளைப்பற்றி அறிவிக்கப்பட்டாலும்

அற்பமென நினைத்தான். கடற் போரில் கைதேர்ந்த கார்த் தேஜினியர்களை வென்று வாகை சூடிய சீசர் இந்தக் கயவர்களின் எதிர்ப்பு எம்மாத்திரம் என்றிருந்தான். இப்படி இரண்டாண்டு கள் உருண்டோடி விட்டது. இன்பம், அதிகாரம் ஏவல், முகமன், விருந்து, வேடிக்கை, எவ்வித குறைவுமில்லாமல் ஓட்டி னான் காலத்தை.

## லூபர் கால் விழா

லூபர் கால் விழா ஒன்று கொண்டாடுகிறார்கள் இதில் கீர்த்தி வாய்ந்தவர்கள். அரைக் கச்சைக் கட்டிக் கொண்டு ஓடுவார்கள். அப்படி ஓடுகின்றவர்களை மலடிகள் தொட்டால் குழந்தை பிறக் கும்; கர்ப்பிணிகள் தொட்டால் குழந்தைப் பேறு எளிதாக இருக் கும் என்ற நம்பிக்கை ரோம் தலைவர்களுக்கும் மக்களுக்கும். அன்று நடைபெறுகின்ற அந்த விழாவிலே ஓடுகின்றவன் அந்தணி. நெடு நாட்களாக மலடியாக இருக்கின்ற தன் *மனைவி கலிபூர்னியாவைப் பார்த்துச் சொல்லுகின்றான் சீசர்.*

*சீசர்: " கலிபூர்னியா, அந்தணி ஓடி வருவான். அவன் ஓடி* வருகின்ற வேகத்தில் பயந்து அவனைத் தொட மறந்துவிடாதே; அந்தணி! நீயும் ஓடுகின்ற ஓட்டத்தில் என் கலிபூர்னியாவைத் தொட மறந்து விடாதே."

அந்தணி: "*சீசர்*, என் *பிரபுவே*! *சீசர்* இதைச் செய் என்று பணித்தால் செய்தாய் விட்டது என்று பொருள். அப்படியே செய் கிறேன்," என்று சீசர் சொன்னபடி கலிபூர்னியாவைத்தொட்டுக் கொண்டே ஓடுகிறான். பெருத்த ஆரவாரம். ரோம் நகர மக் களே அங்கு திரண்டிருக்கின்றனர். விழா பெருத்த கோலாகலத் தோடு முடிந்தது. இறுதியில் ஓர் இடத்தில் கூடினார்கள். அந் தணி, சீசருக்கு முடிபுனைய வேண்டுமென்று விரும்பி அதன்படி மக்கள் கைத் தட்டலுக்கிடையே, முடியை சீசரின் தலைக்கு நேராகக் கொண்டு போனான். *சீசர் அதை ஏற்க மறுத்து* விட்டான். ஒருமுறை, இருமுறை யல்ல, மூன்று முறை. மூன்று முறை அந்தணி முடியை வைக்க, மூன்று முறையும் ஏற்க மறுத்து மயக்கம் வந்தவன் போல் கீழே விழுந்து விட்டான் *சீசர்.* வாயில் நுரை தள்ளிற்று. மக்கள் பயந்தனர். ஆனால்

இதைப் போன்ற ஒரு நோய் சீசருக்கு அடிக்கடி வருவதுண்டு என்று தெரிகிறது. மயக்கம் தெளிந்தபின் சீசர் எழுந்து நின்று, தான் முடியை ஏற்க மறுத்ததற்காக மன்னிக்க வேண்டுமென்றும், தான் செய்வது தவருயின் தலையை வெட்டுமாறும் கேட்டுக்கொண்டான். முடிபுனேயும் ஆசையற்றவன் என்று மக்கள் நினைத்துக் கொண்டார்கள். "தன்னலமற்ற சீசரே வாழ்க!" என்று வாழ்த்திக் கையொலி எழுப்பினுர்கள். அந்தணியும் பேசினுன். அதையடுத்து சீசரும் கிரேக்க மொழியிலே பேசினுன். அந்த விழாவிலே கலந்துகொள்ள வேண்டிய பலர் கலந்து கொள்ளவில்லை. என்ன நடக்கிறது என்பதைப் பார்த்து வந்து அவர்களுக்குச் சொல்வதற்காக கைதேர்ந்த காஸ்கா மட்டுமே கலந்து கொண்டான். புரூடஸ், காஸியஸ், மெதல்லஸ், சிம்பர், சின்ன இவர்களனைவரும் விழாவில் கலந்து கொள்ளாமல், ஆனல் வெளியே நின்றுகொண்டிருந்தார்கள். முக்கியமாகக் கலந்துகொள்ள வேண்டியவர்கள் ஏன் கலந்துகொள்ள வில்லையென்று சந்தேகப்பட்டாள் கர்பூர்னியா. அதனுல் அவள் முகம் சோபையற்று விளங்கியது. ஊர்வலம் வரும்போது ஒதுங்கி நிற்கும் இவர்களையெல்லாம் சீசரும் அந்தணியும் கவனித்துக் கொண்டே வருகின்றுர்கள். மற்றவர்களைப்பற்றி சீசர் சந்தேகப்பட்டாலும், புரூடஸைப்பற்றிக் கொஞ்சங்கூட சந்தேகப்படவில்லை. ஏனெனில் புரூடஸின் தாயும் சீசரின் கள்ளக் காதலியாக இருந்தாள் என்று சொல்லப்படுவது மாத்திரமல்லாமல் புரூடஸும் சீசரின் மகன்தான் என்று நம்ப வேண்டிய உண்மையுமிருந்தது. ஆகவே சீசர் புரூடஸ்மேல் எள்ளளவும் சந்தேகப்படவில்லை. அப்படியே புரூடஸ் தன் பகைவனுலும் ஒரு பெரிய பயங்கரமான சதிச் செயலிலே ஈடுபடுவான் என்று சீசரோ, சீசரின் நண்பர்களோ எண்ணவில்லை. அரசியலில் அனுதைகளாக்கப் பட்டார்கள் என்ற அளவோடு அவர்கள் பகையை மதித்தார்கள். ஆகவே அதற்கு அவ்வளவு முதலிடம் தரவில்லை.

## சதி உதயமாகிறது

சதிக்காரர்கள் முதலில் புரூடஸைத் தங்கள் பக்கம் இழுத்துக் கொண்டால் வெற்றிகரமாக வேலையை நடத்தி முடித்து

விடலாம் என்று நினைத்தார்கள்; அதனுல் புருடஸை அணுகினுர்கள்.

காஸ்கா : புருடஸ்! என்ன, ஆழ்ந்த சிந்தனையிலே இருக்கிருய்?

புருடஸ் : இந்த விழாவெல்லாம் ரோம் நாட்டை எங்கு கொண்டுபோய் விடுமோ என்றஞ்சுகிறேன்.

காஷியஸ் : அஞ்சி யஞ்சி சாவதற்கா நாம் பிறந்தோம்? மீண்டுமோர் முடியரசு தோன்றும் போலிருக்கின்றது.

புருடஸ் : மூன்று முறை முடி தரப்பட்டும், சீசர் அதை ஏற்க மறுத்துவிட்டான் என்று காஸ்கா சொன்னுன்.

காஸ்கா : ஆம்; நான் சொன்னது உண்மை. அங்கு நடந்ததும் அதுதான்.

காஷியஸ் : நிரந்தரமாக முடி தரித்துக் கொள்வதற்காகவே அந்தணியால் கொடுக்கப்பட்ட தற்காலிக முடியைத் தட்டிவிட்டான். அது சீசர் கையாண்ட மிகப் பெரிய தந்திரங்களிலே முதன்மையான தந்திரம். தான் செய்தது தவறென்றும் அதற்காகத் தன் தலையை வேண்டுமானுலும் வெட்டலாம், என்றும் மேலாடை எடுத்துக் கழுத்தைக் காட்டினுனே.

காஸ்கா : நானுகயிருந்தால் வெட்டியிருப்பேன். ஆனுல் அங்கே என் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த நான்கைந்து பேர்கள், "ஐயோ! நல்லவர்க்கு நல்லவனே! நீயா மாள வேண்டும்? வேண்டாம், வேண்டாம் உன்னை மாள விடமாட்டோம்" என்று கத்தி அவனுக்கு மன்னிப்பு அருளினர். அதன் பின்னரே அவன் புறப்பட்டான்.

காஷியஸ் : (புருடஸ் சென்ற பின்) எவ்வளவு அறிவு கூர்மையுடையவனுக இருந்தான். இப்போது ஏதோ மழுங்கல் நிலையில் காணப்படுகிருன். என்ருலும் புருடஸ் தன் பழைய எண்ணத்திலிருந்து மாறிவிட்டான் என்பது மட்டிலும் உண்மை. ஆட்டம் காணுத அவன் மனம் ஆட்டங் காணத் தொடங்கிவிட்டது. அந்த ஆட்டத்தையே பெரும் புயலாக்கி சீசர் எனும் பெரும் மரத்தை வேரோடு சாய்க்க வேண்டும். சீசர் என்னை வெறுக்கின்ற அளவுக்கு புரு

டஸை வெறுப்பதில்லை. நான் காஷியஸாக இல்லாமல் புருட ஸாக இருந்தால் நிலைமையே வேறு. பாவம், புருடஸுக்கும் சீச ருக்கும் உள்ள ரத்த பாசம் போலும். சீசரே! மண்ணில் நீ ஒரு மனிதன் என்ற நிலையிலிருந்து விண்ணில் உறையும் தேவன் என்ற எண்ணம் உன் உள்ளமெல்லாம் பரவிவிட் டது. இனி நீ மனித உணர்ச்சிக்கு இணங்கி வரப் போவ தில்லை. பூஜா உணர்ச்சிக்கும் அடங்காத தேவனாய்விட்டாய். எந்த புருட்ஸ்மேல் நீ சந்தேகப்படவில்லையோ அந்த புரு டஸைக் கொண்டே வேலையை முடிக்கிறேன். காஸ்கா இன் றிரவு உணவு உண்ண வருகிறாயா?

காஸ்கா: வேறோரிடத்தில் ஒப்புக் கொண்டேன்.

காஷியஸ்: நாளைப் பகல் உணவுக்கு ............

காஸ்கா: அதுவரை நான் உயிரோடிருந்தால் விருந் திடும் எண்ணம் உனக்கு மாறாதிருந்தால், நீ தரும் உணவு உண்ணக்கூடியதாக இருந்தால் வருகிறேன்.

## புருடசின் படுக்கையறை

இரவெல்லாம் தூக்கமில்லாமல் தொல்லைப் பட்டுக் கொண் டிருக்கிறான் புருடஸ். சந்தேகங்களே சிந்தனையாய் இவனை பல பக்கங்களில் இழுத்துத் தள்ளுகின்றன. படுக்கையில் புரண்டு கொண்டிருக்கிறான். இத்தாலி, கால், ஸ்பெயின், கிரீஸ், எகிப்து, சிரியா, பிரிட்டன் இவ்வளவுக்கும் நாளை சீசரே மன்னன். முடியாட்சி என்றால் இந்த ரோமானிய மக்கள் அரிமா வெனச் சீறினர். மூறி நிமிர்ந்து முழுங்கிப் புறப்பட்டு படைகளேந்தி பொடிப் பொடியாக்கினர். சுமார் எழுநூறாண்டுகள் முடியாட்சியே தோன்றாதடித்தனர். என்ன அழிவு காலமோ ரோம் சாம்ராஜ்யத்துக்கு! முடியாட்சியை வெறுத்த நமது தந்தைமார்கள் இறந்தனர். ஆகவே வீரம் அவர்களோடு ஒழிந்தது போலும். தாய்மார்களே இன்னும் உயிர் வாழ்கின்றனர். அதனால் கருணை நிறைந்த தாய்க் குணம் தாய் நாட்டைப் பிடித்துக் கொண்டு ஒரு தறுக்கனைத் தார் வேந்தனாக்கப் போகின்றது. இதற்காகவா ரோமானியர் கள் போர்க்களத்தில் இரத்தத்தானம் செய்தனர். உயிர்

களைத் தந்தனர். உடல்களைக் குவித்தனர், அந்தோ! ரோம் நகரமே! என் தாயகமே! நீ இந்தக் கொடுமையை தாங்கத் தான் போகிருயா? ஒருவன் பேராசை சங்கிலியில் நீ ஈன்ற மற்ற வீரர்களின் கரங்களைப் பிணைக்கப் போகிருயா? தாயே இதற்கு நீ கருணை என்று பெயர் கொடுக்கப் பார்க்கிருய் அம்மா! உன் பால் அன்பும் கருணையும் கொண்டவர்களனை வரும் உனக்காக போராடியிருக்கிருர்கள். உன் மணிவயிற் றில் பிறந்த மாந்தர்களனைவரையுமே நீ போர் வீரர்களாக் கிறுய். ஆனுல் ஒருவனை அரசனுக்குவது என்ன நீதியோ! எனக்கே புரியவில்லை மாதாவே. என்றெல்லாம் எண்ணி எண்ணிக் கலங்கிக் கொண்டிருக்கிருன். விடிந்தவுடன், வேலைக் காரன் லூஷியஸ் ஒரு முத்திரை யிடப்பட்டக் கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து புருடஸிடம் கொடுக்கிருன். அதைப் படிக் கிருன், அதில்:—

"புருடஸ்! நீ தூங்குகின்ருய், உன் வாழ்நாளில் ரோமா னியன் ஒருவன் மற்ருேர் ரோமானியனுக்கு அடிமைப்பட்ட துண்டா? தனி ஒருவனுக்கு ரோம் நகரம் கை கட்டி வாய் பொத்தி நின்ற காலம் மலையேறி எழு நூருண்டுகளாயிற்றே. அப்போது ரோம் நகர மக்கள் கடைசீ மன்னனுன் டார்க்கு வின் என்பவன் தன்னை மன்னன் என்றழைத்துக் கொண்ட போது எவ்வளவு கோபாவேசத்தோடு அவனைத் தாக்கித் துரத்தினர். அதன் பிறகு ஏழு நூற்ருண்டுகள் வரையிலும் ஒரு மன்னனை அனுமதித்ததுண்டா ரோம்? இல்லை; இல்லை. அந்தக் கடைசீ மன்னனுன டார்குவின் என்பவனைத் தாக்கிக் கொன்றவன் பெயர் புருடஸ். நீ அல்ல. அவன் பெயரும் உன் பெயராகவே இருந்தது. இல்லை தவருக எழுதி விட்டேன். அவன் பெயரை நீ கொண்டிருக்கிருய். எனினும் நீ ஒரு மன் னனை அதுவும் உன் வாழ்நாளிலேயே அனுமதிக்கப் போகிருய். அன்ருடம் சிறிது சிறிதாகச் செத்துக் கொண்டிருக்கும் ரோம் சாம்ராஜ்யத்திற்கு உயிர்பிச்சை யளிக்க வேண்டியவன் நீதான் புருடஸ். வேறுபலரும் இந்த செயலில் புருடஸுக்கு உதவியளிக் கத் தயாராக இருக்கின்றனர். வெற்றி விழாவின் போது மமதை தலைக்கேறி பலரை இரும்பு சங்கிலியால் பிணைத்திழுத்துக்

கொண்டு வந்தார்களே, அந்தக் கண்ணீர் கலங்கிய காட்சியைக் கண்ட பலர் புருடஸின் கையைத் தூக்கிவிடக் காத்துக் கொண்ருக்கின்ருர்கள். தனி மனிதன் உயிரை நாம் எப்போதும் பாராட்டியதில்லே. அப்படி நாம் நினைத்திருந்தால் பல யுத்த காலங்களை நாம் கண்டிருக்க மாட்டோம். பார்சேலியா சமவெளியில் நாம் பாம்பேயின் படை வரிசையில் நின்ருேம் என்பதற்காக எப்படி நடத்தப்படுகிருேம் என்பதைக் கொஞ்சம் நினைத்துப் பார் புருடஸ். போர்க்களத்தில் தோற்ருேடியவர்களிடம் பரிவு காட்டும் பண்பு சீசரிடம் காணப்படவில்லே. அங்ஙனமிருக்க நாம் யாரிடம் பரிவு காட்டுவது? சிந்தித்து ஒரு முடிவுக்கு வாருங்கள் புருடஸ்" என்று எழுதப்பட்டிருந்தது.

உதடுகள் நடுங்க மெய் சிலிர்க்க படித்து முடித்தான் புருடஸ். சிந்தனை வேலே செய்யத் தொடங்கி விட்டது. முடியாட்சியை நான் அனுமதிக்கின்றேனு? நான் அவ்வளவு அடிமையாகவா போய்விட்டேன்? இல்லே. ஆனுல், நாடு, தன் விடுதலே என்னிடம் இருப்பதாக நினைக்கின்றது. அஃது உண்மையாளுல் என் பங்கைச் செய்யத் தயங்கமாட்டேன். சீசரைப் பொருத்த் வரையில் அவனை வீழ்த்த வேண்டுமென்ற தனிப்பட்ட் விரோதங்கள் ஒன்றும் எனக்கில்லே. ஆனுல் நாடு ஏழு நூருண்டுகளாக ஒப்பாத ஒன்றை வலிய புகுத்த சீசர் எண்ணுவாளுல் இந்த புருடஸ் அந்தக் கொடுங்கோன்மையை அனுமதிக்க மாட்டான். நம்மிடம் நேரில் இவைகளை எடுத்துச் சொல்ல அச்சப்பட்ட உண்மையான ஜனநாயகப் பிரியர்கள் கடிதம் மூலம் அறிவித்திருக்கின்ருர்கள்.

இந்த எண்ணம் அவர்களுக்கு எப்படி வந்தது? ஏன் வராது? அவர்களும் மனிதர்களல்லவா? அதிலும் சிந்திக்கும் ஆற்றல் உள்ள மனிதர்களல்லவா? சீசரின் அரசியல் தொடக்கத்தையும் இன்றைய மாற்றத்தையும் எண்ணுகிருர்கள். ரோமின் வெற்றிக்கும் கீர்த்திக்கும் இவன் ஒருவனேவா காரணம்? எத்தனையாயிரம் வீரர்கள் உயிர்த் தியாகம் செய்தார்கள்? எவ்வளவு பேர் மனைவி மக்களை நடுத் தெருவில் தவிக்க விட்டார்கள்? எவ்வளவு பேர் இன்பம் என்ற

சொல்லை, பிறர் சொல்லக் கேட்டதன்றி, அதன் சாயலைக்கூடப் பார்க்காதவர்கள் ?

அந்த எண்ணற்ற உயிர்களை அழைத்துக்கொண்டு, சங்கொலி முழங்க, படைவீரர்கள் புறப்படுவதை பகை நாடுகளுக்கு அறிவித்துக் கிளம்பிய போர், வான் முட்டக் கிளம்பிய செந்தூள், கருந்தூள்கள் சீசர் ஒருவனாலே எழுப்பப்பட்டதா ? இல்லை, இல்லை. மாளாத போர் எனின், மரணம் தன்னை அழைக்கிறது என்று பொருள். யாருக்காக ? எந்த தனி மனிதனைக் காப்பதற்காக ? எவருக்காகவும் இல்லை! தன்னை ஈன்றெடுத்தத் தாயகமாம் ரோம். ரோம் நகரை உயர்விக்க அதன் வீர நெற்றியில் சுருங்கல் கோடுகள் வீழாதிருக்க, அதன் கௌரவ மணி முடியில் பதித்து வைத்த வெற்றி யென்னும் வைரத்தின் ஒளி மத்தியதரைக் கடலில் படர்ந்து எதிரிகளின் கண்கள் மங்கிப் போவதற்காக எண்ணற்றோர் இறந்தனர். — உதிர வாயோடு வீழ்ந்தனர்.

நாட்டைப் பிடிப்போம் என்ற நம்பிக்கையெனும் மாதேவியே ! அந்த மாமல்லர்களை நடத்திச் சென்றாள். அப்போதெல்லாம், இந்த சீசர் தங்க ஆசனத்தில் அமர்ந்து கொண்டே, தன்னை தார் வேந்தன் என்று அழைத்துக் கொள்ளாமல், தந்திரமாக தாசானுதாசன் என்று தடி உள்ளம் படைத்தவர்களை ஏமாற்றுகிறானே இந்த சீசர். — தான் நிரந்தரமான முடியைத் தேடிக் கொள்ள, தணியாத ஆசை கொண்டிருக்கும் இந்த சீசர் தான் என்ன சொன்னான் அப்போதெல்லாம் ? "நாம் சென்றோம்; நாம் வென்றோம்" என்றான். இப்போது, பேசும்போதெல்லாம் என்ன சொல்கிறான் ? " நான் சென்றேன்; நான் வென்றேன்" என்கிறான். பொதுத் தொனியிலிருந்து தனித் தொனியைக் கிளப்பிவிட்டான். நாம் என்று சொன்னதிலிருந்து நான் என்று மகா கர்வத்தோடு உச்சரித்தானே ஒரு நாள்.

அந்த முதல் நாளே இவன் ஒழிந்தான் என்று நினைத்தேன். ஒருவனுக்கு எப்போது இந்த எண்ணம் வருகிறது ? ஒரு சிலர் ஒருவனை சகல கலா வல்லவன் என்று போற்றுகின்ற நேரத்தில்

தங்களையும் ஒன்றுமறியாத மடையர்கள் என்று நினைக்கிறார்களே ! அந்த நாளில் தான் ஒருவன் பொதுத் தன்மையிலிருந்து தனித் தன்மைக்கு ஓடுகிறான் — இல்லை, இல்லை — ஓட்டப்படுகிறான். இவன் ஓட முயன்றாலும் முயலாவிட்டாலும் தற்பெருமை "வா, வா" என்று அழைக்கிறது. அங்கே மனிதன் எவ்வளவு திட சித்தமுடையவனாக இருந்தாலும் தன் நிலையிலிருந்து மாறிவிடுகிறான்.

இன்றைய சீசர் அந்த நிலையிலிருக்கின்றான் ? அப்படியாகிவிட்ட சீசர் கண்களுக்கு நாம் நண்பர்களாகப் படமாட்டோம். அடிமைகளாகப் படுகிறோம். முன்பெல்லாம் ஆய்வுரை கேட்பான். இப்போதோ ஆணையிடுகிறான் ! இதன் காரணத்தால் நான் சீசரை மாத்திரம் குற்றம் சொல்லவில்லை. ரோமானிய மக்களையே குற்றம் சொல்லுகிறேன். ஏன் ? சீசரிடம் அன்பாயிருங்கள் என்றோம். அவர்கள் பக்தியாய் விட்டார்கள். அன்பு செலுத்துவதும் பக்தி செலுத்துவதும் ஒன்றுதானே என்று பலர் அறியாமையால் கேட்கின்றனர். இல்லை, இல்லை. பக்தர்களாய் விட்டால் யோசனை கூறவோ எதிர்த்துப் பேசவோ சம உரிமையோடு பழகவோ முடியாது. அன்பர்களானால் இடித்துக் கூறலாம் ; எதிர்த்துப் பேசலாம் ; இது சரியில்லை என்று சொல்லலாம் ; சம உரிமைகளோடு பழகலாம். இதுதான் வேற்றுமை என்பதை மக்கள் உணராத காரணத்தால், அன்பு செலுத்துவதற்குப் பதில் பக்தி செலுத்தி பரமனாக்கி தங்களை பாபிகளென்று நினைத்துக்கொண்டு, ஒரு காலத்தில் நண்பர்களாக இருந்தவர்வகள் பிற்காலத்தில் கை கட்டி நிற்கவும், குற்றேவல் புரியவும், தாயகம் தாயகமென்பதெல்லாம் மாறி, தலைவன் தலைவனென்று கூத்தாடத் தொடங்கி விடுகிறார்கள்.

இந்தச் சூழ்நிலையின் சூறாவளி தான் சீசர். பலரை பகை முடிக்க பலர் தேவைப்பட்டார்கள் அன்று சீசருக்கு. அன்று தேவைப்பட்ட அதே பலரை, இன்று பழிவாங்க தான் ஒருவனே போதுமென்கிறான் சீசர். எப்படி இயலும் ? இந்த எண்ணம் அவனுக்கு வந்த காரணம் என்ன ? அதைத்தான் நானும்

சிந்திக்கிறேன். எனக்கு முன்னே நமது தோழர்களும் சிந்தித்திருக்கிறார்கள். பிறர் உழைப்பால் அவன் காலடியிலே கொண்டுவந்து குவிக்கப்பட்டிருக்கும் அதிகாரம் என்றாவது ஒரு நாள் கொள்ளையிடப்பட்டு விடும் என்ற முடிவுக்கு வந்து விட்டான் சீசர். அதனாலே தான் உருட்டலை வேலியாக்கி, மிரட்டலை மலையரணாக்கி தன் பராக்கிரமத்தைப் படைக்கலங்களாக்கிக் கொண்டிருக்கின்றான். இவைகள் எக்காலத்தும் அவனைக் காப்பாற்றுமா? இல்லை. அப்படி ஒரு சபல நம்பிக்கை சீசருக்கு.

இவன் மற்றவர்களைத் தாழ்வாக நினைக்கலாம். ஆனால், இவனையும் நம்மையும், ரோம் மாதா தானீன்ற மக்களிலே ஒருவனை உயர்ந்தவனாகவும், மற்றவர்களைத் தாழ்ந்தவர்களாகவும் கருதப் போவதில்லை. அந்த நம்பிக்கை அவனியிலே எங்குமே அழிந்ததில்லை. ஏன்? நமது முன்னோர்கள் இந்த ஏழு குன்றங்களுக்கிடையே காலடி வைத்தபோது இங்கேயிருந்த, ஆதிக் குடிகளான மலை ஜாதியினர் உரிமைக்கும் பங்கம் நேர்ந்ததென சிங்கமெனக் கிளம்பினர். அவர்கள் நமக்குப் பகைவர்களேயல்ல. எனினும், நாம் அவர்களை அடக்கி விட்டோம். இல்லையானால், நாடோடிகளாக வந்த நமக்கு வாழ இடமேது? இதே முறையைத் தான் இன்று சீசர் கடைபிடிக்கிறான். உலகம் ஒப்பாத முறை. ஒத்து வராத முறை. மலை ஜாதியினரா நாம்? கொஞ்சமும் மூளையே இல்லாமல் முரட்டுத்தனம் ஒன்றையே கொண்டிருக்கிற அவர்களுக்கு நம்மை ஒப்பிட்டு, அவர்களை — அந்த மலை ஜாதியினரை நமது முன்னோர்கள் நடத்தியதைப் போல நம்மையும் நடத்த எண்ணிவிட்டான். காலத்திற்காகக் காத்திருந்தேன். அத்தக் காலமும் நண்பர்களின் கைக் கடிதமாக வந்து சேர்ந்து விட்டது.

அதற்குள் யாரோ கதவைத் தட்டுகின்றார்கள் என்று வேலைக்கார லூஷியஸ் வந்து சொல்கிறான். புரூடஸ், "யார் என்று பார்த்து வா பையா லூஷியஸ்" என்கிறான். லூஷியஸ் (பார்த்து வந்து) உங்கள் நண்பர் காஷியஸ் வந்திருக்கின்றார்-

புருடஸ்: அவர் மட்டிலுமா வந்திருக்கின்றார்?

லூஷியஸ்: இல்லை; அவரோடு வேறு சிலரும் வந்திருக்கின்றார்கள்.

புருடஸ்: அவர்கள் யாரென்று தெரியுமா?

லூஷியஸ்: அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. தொப்பிகளைக் காது வரையிலும் இழுத்து விட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

புருடஸ்: அவர்கள் எல்லாரையும் உள்ளே வரவிடு.

ஒருவர்பின் ஒருவராக வருகின்றார்கள்.

அவர்கள் காஷியஸ், தேஸியஸ், காஸ்கா, சின்னு, மெதல்லஸ், திரிவோனியஸ், சிம்பர் ஆகியோர்கள்.

புருடஸ்: ஒவ்வொருவரிடமும் கைகுலுக்கி வரவேற்கின்றான்.

## முடியாட்சிக்கு முடிவு

காஷியஸ்: புருடஸ் நாங்களனைவரும் உன்மேல் அளவற்ற அன்பும் உன் வீரத்தில் எல்லையற்ற பெருமையும் கொண்டவர்கள்.

ஆம்; நீர் ஏன் விழாவில் கலந்து கொள்ளவில்லை?

புருடஸ்: எனக்கு விளையாட்டு எண்ணமில்லை. அந்தணிக்கு இருப்பதைப் போன்ற உணர்ச்சி எனக்கில்லை.

காஷியஸ்; ஆம் புருடஸ்! நீ சில நாட்களாகவே மாறுபட்டுக் காண்கிறாய். என்னைக் காணும் போதெல்லாம் புதிய உணர்ச்சியைக் காட்டுகின்றாய்.

புருடஸ்: காஷியஸ், ஏமாந்து விடாதே. என் தொல்லைகள் என்னுள்ளேயே அடங்கி விடட்டும் என்று என்னுள்ளத்தில நானே மறைத்துக் கொள்கிறேன் என்பதே பொருள். மாறுபட்ட கருத்துக்களாலும் பிறருக்குத் தெரியாத சில கோட்பாடுகளாலும் நான் சில நாட்களாகக் குழம்பியிருப்பது உண்மைதான். ஆகவே தான் என்னுடைய நடத்தை உன்னை சந்தேகப்படச் செய்திருக்கிறது. புருடசின் மிகச் சிறந்த நண்பர்களிலே காஷியஸ் என்ற நீ வருத்தப்படுமளவுக்கு என்னை நானே மனப்

போராட்டத்தில் இழுத்து விட்டிருக்கின்றேன் என்று நீங்கள் கருதுகிறீர்கள். என் நிறைவு பெருத மனம் உங்கள் மனதை சஞ்சலப்படச் செய்திருக்குமாஞல் அதற்காக வருந்துகின்றேன். மன்னிக்க வேண்டும் ; வேறு தவருக நினைக்காதீர்கள்.

காஷியஸ் : உண்மைக்கு வெகு சீக்கிரத்திலே வந்துவிட்ட உங்களைப் பற்றித் தவருக நினைத்துக் கொண்டிருந்தேன். அதனுலேயே நாம் கலந்தாலோசிக்க வேண்டிய பல கருத்துக்களை என் நெஞ்சிலேயே மூடிவைத்துக் கொண்டிருந்தேன் புருடஸ்.

கண்ணுடியின் உதவியில்லாமல் நீ உன் முகத்தைக் காண முடியுமா ?

புருடஸ் : முடியாது, கண் தன்னைத்தானே காணுது வேறு பொருள்களின் நிழல் பட்டாலன்றி காணமுடியாது.

காஷியஸ்: உண்மை! உண்மை! உன்னுள்ளே பொதிந்து கிடக்கும் நற்பண்புகளை நீயே காண, அத்தகைய கண்ணுடி ஒன்றை பெற்றிருக்கவில்லையே என்று நான் கவலைப் படுகின்றேன். நான் மாத்திரமல்ல, நாளுக்கு நாள் சிதைந்து கொண்டிருக்கும் ரோமின் நல்வாழ்வைக் காப்பாற்ற வேண்டுமென்று நினைக்கின்ற பலர், சீசரின் செறுக்கை ஒப்புக்கொள்ளாத பலர், சீசரால் சுமத்தப்பட்டுள்ள அடிமைச் சுமையைத் தாங்காது, புருடஸ் தன் கண்களைப் பெற்றிருந்தால் நன்ருயிருக்குமே என்றெண்ணுவதை நான் தெரிந்து கொண்டிருக்கிறேன் நண்பனே! நானே ஒரு கண்ணுடியாக உன் முன் நின்று உன்னுள்ளத்தே பொதிந்திருக்கும் ஆற்றலைக் காட்டுகிறேன்.

(வெளியே இசையொலி கேட்கிறது.)

புருடஸ் : எதற்காக இந்த ஆரவாரம் ? சீசரை மன்னனுக மக்கள் ஏற்றுக் கொள்கிருர்களா ?

காஷியஸ் : அப்படியாஞல் அதை நீ ஒப்பவில்லையா ?

புருடஸ் : ஒப்பமாட்டேன். ஆனுல் சீசர் என் நண்பன். நீ சொல்ல விரும்புவது பொதுநலத்திற் கென்ருல் அறத்தை ஒரு பக்கம் நிறுத்தி மரணத்தை ஒரு பக்கம் நிறுத்திப் பார்ப்பேன்.

இறப்பால் ஏற்படுகிற அச்சத்தை விட நீதியால் ஏற்படுகிற இன்பத்தையே பெரிதென மதிக்கின்றேன்.

காஷியஸ்: அப்படியாயின் ரோம் நிச்சயமாக புத்துயிர் பெற்று விட்டது. அறமே உருவான புருடஸ்! உங்கள் எண்ணம் ஒருவாறு தெரிந்து விட்டது. ஆனால், என்னைப் பொருத்த வரையில், என்னைப் போன்ற ஒரு பொருளுக் கஞ்சி வாழ்வதை விட சாவையே விரும்புகிறேன். சீசரைப் போல உரிமையுள்ள மனிதனாக நானும் பிறந்தேன். நீயும் பிறந்தாய். அவனைப் போலவே நாமும் வாழ்ந்தோம். டைபர் நதி கடுங் காற்று நாளில் பெருத்த ஆரவாரத்தோடு அலை மோதிக் கொண்டிருந்தது. "காஷியஸ்! இந்த வெள்ளத்தில் குதித்து அதுவரை நீந்து வாயா"? என்று ஒரு குறிப்பிட்ட இடத்தை சீசர் காட்டிக் கேட்டான். "சரி" என்றேன். உடைகளைக் கழட்டாமல் குதித்து நீந்தி என்னைத் தொடும்படி கூறிவிட்டு நானும் வேகமாக நீந்தினேன். என்னைத் தொட முடியாமல் திணறினான் இந்த சீசர். "காஷியஸ், நான் மூழ்கி விடுகிறேன் என்னைக் காப்பாற்று, காப்பாற்று" என்று கத்தினான். ஆம் இந்த சீசர் தான் கத்தினான். ஆட்டங் கொடுத்துக் கொண்டிருக்கும் ஏணியின் உச்சியிலே நிற்கிறானே இந்த சீசர் தான். ஓடி வந்து காப்பாற்றினேன். அந்த கொந்தளித்தெழுந்த அலைகளிலிருந்து காப்பாற்றினேன். அந்தக் கோழை உள்ளம் படைத்திருந்த இவன்தான் இன்று கடவுளாய் விட்டான். இவன் நா அசைத்தால் இந்த காஷியஸ், ஏனையோர், ஏன், ரோம் நகரமே அசைந்து கொடுக்க வேண்டுமாம்.

அது மட்டிலுமா, ஸ்பெயின் மேல் படை எடுத்துத் தளத்தில் தங்கி இருந்தபோது காய்ச்சல் கண்டு நடுங்கினான். உதடுகள் நிறமிழந்தன. கண் ஒளி மங்கியது. தன் பேச்சுக்களால் பணிக்கிறானே, இந்த நாவு தான் அன்று "திதினியஸ்! குடிப்பதற்குக் கொஞ்சம் நீர் கொடு, என்று ஒரு பெண்ணைப் போல கதறினான்" அத்தகைய கோழை உள்ளத்தான் ஒருவன் இன்று குவலயத்தைக் கட்டியாள நினைப்பது வியப்பாகவே இருக்கின்றது!

(மற்றொரு ஆரவாரம்)

புருடஸ்: சீசருக் களிக்கும் சில புதிய பெருமைகளுக்காகவா இந்த ஆரவாரம்?

காஷியஸ்: தன்னிகரில்லாது அடியெடுத்து வைக்கின்ருன் சீசர். அவன் அடிகளுக் கடியிலே சாவக் கிடக்கிருேம் நாம். அப்படி நாம் சாவது புகழுடையதாகுமா? அவரவர்கள் விதியை அவரவர்களே உறுதி செய்து கொள்ளவேண்டும். அன்புள்ள நண்பனே! புரூடஸே! நாம் இப்படி அடிமைகளாக வாழப் பிறந்த குற்றம், நாம் பிறந்த நாளின் குற்றமா? இல்லை, பிறருக்கு அடிமையாய் விட்ட நமது குற்றமே அது. புரூடஸ், புரூடஸ் என்ற இந்தப் பெயரை விட சீசர் என்ற பெயர் ஏன் இவ்வளவு புகழடைய வேண்டும்? சீசர் என்ற பெயரை விட புரூடஸ் என்ற பெயர் எவ்வளவு கம்பீரமாகத் தொனிக்கிறது! சீசர், புரூடஸ்-இரண்டையும் எழுதிப்பார். உன் பெயரும் அவன் பெயரைப் போல் சிறப்புடையது தான். உச்சரித்துப் பார். நிறையில் போட்டுப்பார். எண்ணிப் பார். இரண்டும் ஏற்றத் தாழ்வில்லாத ஒரே தன்மையுடையதே. எந்த உணவு, யார் தந்த புகழ், யார் போர்க் களத்தில் சிந்திய ரத்தம் இவனை இவ்வாறு வளர்த்து விட்டது? காலமே! நீ கேலிக் குறி ஆக்கப் பட்டு விட்டாய். ஏ, ரோம் நகரமே! நீ நையாண்டி செய்யப் பட்டு விட்டாய். நீ எப்போது ஒருவன் நாவால் புகழப் பட்டாய்? தனி ஒருவன் ஆணைக்கு நீ எப்போது அடங்கி நடந்தாய்? ரோமின் புகழ் சேர்க்க எட்டுத் திக்கிலும் சென்ருேர் பலரில் ஒருவனை மட்டிலும் ரோம் எப்போது தன் மார்பில் தாங்கித் துள்ளியது? தோளில் தூக்கி ஆடியது? அன்று எல்லாருக்கும் இடமிருந்த ரோமில் இன்று ஒருவனுக்கே இடமுள்ளது. முன்பொரு காலத்தில் இந்த புரூடஸ் என்ற பெயர் தாங்கிய ஒருவனல் தான் டார்க்குவன் என்ற அரசன் கொல்லப் பட்டான். அது ரோமுக்குத் தன்மான மிருந்த அந்தக் காலம்.

புரூடஸ்: நீ என்னை என்ன செய்யச் சொல்லுகிருய் என்பதை ஒருவாறு யூகித்துக் கொண்டேன். நானும் சிலவற்றைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பேன். இந்த நேரத்தில் என்னிடமிருந்து வேறு எதையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படாதே. ரோம் தாயீன்ற ஒரு வீர மகனை

யிருப்பதைவிட ஒரு பட்டிக்காட்டு மகனாக இருப்பதையே புருடஸ் விரும்புகிறான் என்பதை மட்டும் நம்பு.

காஷியஸ்: மிக்க நன்றி. என் வலுவற்ற சொற்கள் புருடஸை இப்படி உணர்ச்சி வசமாக்கி எரிமலையாக்கும் என்று எண்ணவில்லை.

புருடஸ்: விழா முடிந்தது. சீசர் திரும்புகிறான்.

புருடஸ்: இரவெல்லாம் தூக்க மில்லை. நீங்களும் தூங் காமலே இருந்திருக்கின்றீர்கள் என்று நினைக்கிறேன். என் கவலைகளே உங்களைத் தூங்க விடாமல் கெடுத்தது என்று நினைக்கின்றேன்.

காஷியஸ்: இல்லை, இல்லை, அதை மாற்றி நினைத்துக் கொள்ள வேண்டும். எங்கள் கவலைகளே உங்களைத் தூங்க விடாமல் தடுத்தது என்றெண்ணுகிறோம்.

மெதல்லஸ்: பொதுவாக ரோம் நகரக் கவலைகளே நம் அனைவரையும் தூங்காமல் செய்தது என்று வைத்துக் கொள் வோமே.

காஷியஸ்: அதுவும் சரி. ( புருடஸ் காதில் ஏதோ 'குசு குசு' என்று பேசுகின்றான்.)

புருடஸ்: ஒவ்வொருவராகக் கை கொடுங்கள்.

காஷியஸ்: ஆம், நம் உறவை பலப்படுத்திக் கொள்வோம்.

புருடஸ்: உறுதி எடுத்துக் கொள்ளவேண்டுமா? வேண் டாம். அப்படி ஒரு சூளுரை நமக்குத் தேவைதானா? இக்கால ரோம் அடைந்திருக்கும் முடிவே நம்மை ஒரு முடிவுக்கு வரச் செய்கிறது. ஒருவன் தவறாமல் அனைவரும் மடிந் தொழியு மளவுக்கு கொடுங்கோன்மை படமெடுத்தாடுகிறது என்பதைக் காணும் எந்த உண்மை ரோமானியனுக்குத்தான் இரத்தம் கொதிக்காமல் இருக்கும். இது வரையில் இந்த ரோமாபுரி மண் ணில் நடந்திருக்கும் செயல்கள் கோழைகளை வீரமுறச் செய்ய வும், பெண்டிரை எஃகு உள்ளமாக்கவும் போதாவா? நமக்கு ஒரு சூளுரை மூலமா கட்டுப்பாடு வேண்டும்? நீதி யுடையோர்

ஒவ்வொருவரும் தங்களுக்குள்ளே செய்து கொள்ளும் முடிவன்றி வேறெந்த சூளுரை நமக்குப் பயன்படப் போகிறது? பூசாரிகள், கோழைகள், சூழ்ச்சிக்காரர்கள் ஆகியோர் தங்கள் கையாலாகாத ஒன்றை நினைத்துக் கொண்டு ஆறுதலுக்காக சூள் உரைத்துக் கொள்வர். உண்மைக் காரணங்களுக்காக உயிர் விடத் துணியும் எவனுக்கு சூளுரை தேவை? வேண்டாம், நண்பர்களே வேண்டாம். ரோமன் ஒருவன் தன் நியாயமான எண்ணத்திலிருந்து சிறிது பிழைபடினும் அவன் பிறந்த உயர் குடிப்பிறப்பு தலை குனியுமாக!

காஷியஸ்: சிசிரோ இருக்கிருனே அவனையும் சேர்த்துக் கொள்வோமா?

சின்ன: ஆம், அவனை எப்படியும் விடக் கூடாது. மெதல்லஸ் அவனுடைய நரைத்தத் தலை நம்முடைய காரியங்களில் யாரையும் சந்தேகப்படத் தூண்டாது. அவன், தான் பெற்றிருக்கும் நாவன்மையால் நம் செயலை சரியென்று காட்டுவான்.

புருடஸ்: தயவு செய்து அவன் பெயரை உச்சரிக்க வேண்டாம். நம் எண்ணத்தையும் அவனிடம் வெளியிடாதீர்கள். ஏனெனில், பிறர் தொடங்குகின்ற எந்தக் காரியத்தையும் அவன் ஒப்புக் கொள்வதில்லை. எதையும் தானே தொடங்கவேண்டும் என்று நினைப்பான். மற்றவர்கள் தனக்கு அடங்கி நடக்க வேண்டுமென்று நினைப்பான். அவ்வளவு சுயநலக்காரன் அவன். மேலும் அந்தணியின் நிழல் தான் அவன். எக்காரணத்தைக் கொண்டும் அவன் பெயரை நினைக்கவே வேண்டாம்.

காஷியஸ்: அப்படியாளுல் அவனை விட்டு விடுங்கள்.

காஸ்கா: உண்மையாகவே அவன் இதற்குத் தகுதியானவனல்ல.

தேஸியஸ்: சீசரைத் தவிர வேறு யாரையும் தொடக் கூடாது.

காஷியஸ்: நன்ருகச் சொன்னுன் தேஸியஸ். ஆனுல், நான் அந்தணியைப்பற்றி நினைக்கிறேன். சீசரை உண்மை

யாக நேசிக்கின்ற நண்பன் அவன். அவனை விட்டு வைத்தால் அவனால் நமக்கு அபாயம் ஏற்படவும் கூடும். ஆகவே அந்தணி, சீசர் இருவரையுமே தொலைத்து விடுவது நல்லதென்று கருதுகிறேன்.

புருடஸ்: நாம் எடுத்துக் கொண்டிருக்கின்ற முயற்சி இரத்தம் சிந்தும் செயலாகும். தலையை வெட்டி விட்டால் உறுப்புக்கள் ஆடாது. அதைப் போலவே சீசர் ஒழிந்தால், சீசரின் உறுப்புகளிலே ஒருவனான அந்தணி ஆடமாட்டான். நாம் சீசரை யாகத்தில் பலியிடுபவர்களாக இருக்க வேண்டுமே யன்றி கண்டவரைக் கொல்லும் கொலைஞர்களாக இருக்கக் கூடாது. சீசரின் கெட்ட குணங்களையே நாம் வெறுக்கிறோம். அவனைக் கொல்லாமல் அவனுடைய நல்ல பண்புகளை நாம் பெற முடியுமானால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்? என்ன செய் யலாம்? தன் கெட்ட நினைவுகளுக்காக சீசர் குருதி கொட்ட வேண்டியவனாய் விட்டான். நாய்கள் உணவுக்கென்று சீசனைக் கொல்லுதல் கூடாது. ஆண்டவனுக்கிடும் உணவென்று கொல்லுவோம். நாம் செய்யப் போகும் செயல் ஒரு இன்றியமை யாமையைக் கருதிச் செய்ததாக இருக்கவேண்டும். பொறாமையை மேற்கொண்டு செய்ததாக இருக்கக் கூடாது. சீசரின் முடிவுக்குப் பின் அவனது கைகள் எப்படி ஓங்கி நிற்க முடியும்? அந்தணியும் அதோடு தீர்ந்தான் என்று பொருள்.

காஷியஸ்: என்றாலும் அந்தணியைப் பற்றி இன்னும் அஞ்சிக் கொண்டுதானிருக்கின்றேன்.

புருடஸ்: நண்பனே காஷியஸ்! அவனைப்பற்றி எண்ண வேண்டாம் அவன் சீசரின் நல்ல நண்பன் என்ற காரணத் தாலே. சீசரின் தலை வெட்டப்பட்டபின் அவனை எண்ணி எண்ணிச் சாவான். அப்படி அவன் செய்தாலும் நான் வியப் புறுவேன். ஏனெனில் அந்தணி, பாட்டும், ஆடம்பரமு முடைய வன். பிறரோடு கூடி விளையாடுவதில் விருப்பம் கொண்டவன்.

திரிவோனியஸ்: அப்படியானால் அந்தணியைக் கொல்ல வேண்டாம். விட்டு விடுவோம்.

(கடிகாரம் காலை மூன்றடிக்கிறது)

திரிவோனியஸ் : நாம் பிரிந்து செல்லும் நேரமாயிற்று காஷியஸ்! இன்று சீசர் மன்றத்துக்கு வருவானோ வரமாட்டானோ தெரியவில்லை. ஏனெனில் சீசர், முன்பெல்லாம் குறி கேட்டல், சகுனம், இயற்கைக்கு விரோதமான செயல்கள் முதலானவைகளை நம்புவதில்லை. ஆனால் வர வர மூட்பபழக்கங்களுக்கும் குறி சொல்வோர்தன் தூண்டுதல்களுக்கும் அடிமைப் பட்டு விட்டான்.

தேஸியஸ் :—அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். தற் புகழ்ச்சிக்கு அடிமைப்படாத மனிதர்களே இல்லை. யாளியை மரங்களாலும் கரடியைக் கண்ணாடியாலும், யானையை பொய்க்குழிகளாலும், சிங்கத்தைக் கன்னியாலும், மனிதர்களை தற்புகழ்ச்சியாலும் ஏமாற்றி விடலாம். " நீங்கள் உங்களைப் புகழ்ந்து பேசுவோரை வெறுக்கிறீர்கள்" என்று நான் கூறினால், அந்தச் சொற்களையே நான் புகழ்ந்து பேசியதாக எண்ணி "ஆம்" என்று தலையாட்டுகின்றான். நான் அவனை மன்றத்திற்குக் கொண்டு வருகின்றேன்!

காஷியஸ்: இல்லை. நாம் அனைவருமே அங்கு போக வேண்டும்.

புரூடஸ்: சரியாக எட்டு மணிக்கு.

சின்னா: அந்த குறிப்பிட்ட நேரத்தைத் தள்ளிவிடக் கூடாது.

மெதல்லஸ்: மாவீரன் பாம்பேயை புகழ்ந்து பேசியதற்காக சீசரால் சினந்து ஒதுக்கப்பட்ட லிகாரியஸ் என்பவனைப் பற்றி நீங்கள் யாரும் நினைவிற் கொள்ளவில்லையே என்பதற்காக ஆச்சரியப்படுகின்றேன்.

புரூடஸ்: நல்ல வேளையாக நினைவு படுத்தினாய். என்மேல் நட்பு கொள்ளும் அளவுக்கு அவனுக்கு உதவி செய்திருக்கின்றேன். அவனை இங்கே அனுப்பு; நான் சரிபடுத்துகிறேன்.

காஷியஸ்: பொழுது புலர்கிறது. நாங்கள் செல்கிறோம். நண்பர்களே பிரிந்து செல்லுங்கள். உங்கள் உறுதியை மறவாது போற்றி செயல் மூலம் உண்மையான ரோமானியர்கள் என்பதை மெய்ப்பித்துக் காட்டுங்கள்.

புரூடஸ்: உங்கள் உள்ளக் கிடக்கையை உணர்ச்சிவசப் பட்டு வெளியே காட்டி விடாதீர்கள். சிறந்த ரோமானிய நடிகர்களைப்போல நாம் நடிக்க வேண்டும். உங்களுக்கு தனித் தனியாக நன்றி. போய் வாருங்கள்.

(வேலைக்காரனைப் பார்த்து) பையா லூஷியஸ். தூங்குகின்ருயா ? தூங்கு, தூங்கு, நன்ருகத் தூங்கு. தூக்கமெனும் ஆனந்தத் தேன் துளிகளை சுவைத்து நன்ருகத் தூங்குகின்ருய், தீராத கவலைகளைத் தோற்றுவிக்கும் கற்பனைகளும், காட்சிகளும் உன்னை ஏமாற்றுவதே இல்லை.

## புரூடஸ் – போர்ஷியோ

### கணவன் — மனைவி

இரவெல்லாம் ஆட்கள், முகம் மூடிக் கொண்டு வருவதும் விடியும்வரை தோட்டத்தில் அனைவரும் கூடிப் பேசிக் கொண்டிருப்பதும் போர்ஷியோவுக்கு பெருத்த சந்தேகத்தையும் அச்சத்தையும் உண்டாக்கிவிட்டது.

போர்ஷியோ : என் தலைவ புரூடஸ் !

புரூடஸ்: கண்ணே, ஏன் இவ்வளவு காலையில் எழுந்து வந்தாய் ? காலைக் குளிர் உன் உடலுக்கேற்றதல்லவே.

போர்ஷியோ : உங்களுக்கும் ஆகாதுதானே. சரேலென்று படுக்கையிலிருந்து எழுந்து வந்து விட்டீர். கைகளை பின்னல் கட்டிக்கொண்டு இங்கு மங்குமாகத் திரிந்துகொண்டு எதையோ தீவிரமாக சிந்தித்துக் கொண்டிருந்தீர்கள். ஏன் இந்நிலை என்று கேட்டேன் ! கோபத்தோடு பார்த்தீர்கள். மேலும் வற்புறுத்தினேன், கையை உயர்த்தி, 'போ' என்று அதட்டினீர்கள். அதற்கு மேலும் உங்கள் கோபத்தை வளர்க்க நான் பிரியப்படவில்லை. இயற்கையாக மனிதர்களுக்கு எப்போதாவது ஏற்படும் நிலைதான் இது என்று, இடத்தை விட்டு அகன்று விட்டேன் ! அன்பே ! இந்த நிலையைத் தாங்கள் வளர்த்துக் கொண்டால், நானே பார்த்து அடையாளம் கண்டு கொள்ள

முடியாத அளவுக்கு உடல் மெலிந்து விடுவீர்கள்! அந்த அளவுக்கு உங்கள் உள்ளத்தில் வேரூன்றியிருக்கும் சிந்தனை உங்களை உண்ணவும், உறங்கவும் நடக்கவும் விடுவதில்லை. நீங்கள் அடைந்திருக்கின்ற துயரத்தின் காரணத்தை நானும் தெரிந்து கொள்ளலாமா?

புரூடஸ்: உடல் நலமில்லை.

போர்ஷியோ: உடல் நலமில்லையென்றால் நலமடைய புரூடஸ் இதுவரை வழி கண்டுபிடித்திருப்பார், அந்த அளவுக்கு என் கணவர் அறிவாளி.

புரூடஸ்: ஆம் நல்லவளே! நான் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். போய்ப் படுத்துக் கொள்.

போர்ஷியோ: என் ஆருயிர்க் காதலன் புரூடஸுக்கு உடல் நோயா? இல்லை. இல்லை. உள்ள நோய்-நோயாயிருந்தால் இப்படியா இந்தப் பனியிலும், வாத நோய் கொடுக்கும் காற்றிலும் திரிவார்? படுக்கையிலிருந்து திருட்டுத்தனமாகச் செல்வாரா? என்னால் நம்பவே முடியவில்லை. அன்பே! என் அருமைக் காதலரே! நான் தங்களுடைய சட்ட ரீதியான மனைவி என்ற முறையில் உங்கள் உள்ளத்தை அரித்துத் தின்று கொண்டிருக்கும் குறைகளைத் தெரிந்து கொண்டேயாக வேண்டும். அன்று என் அழகைப் புகழ்ந்ததையும், இன்று வரை நம்மிருவரையும் இணைபிரியாமல் பிணைத்திருப்பதையும் நினைவு படுத்திக் கேட்கிறேன். இருட்டிலும் முகங்களை மறைத்து ஆறேழு பேர்கள் வந்தார்களே எதற்காக? – சொல்லுங்கள். துக்கச் சுமையைத் தாங்காது தத்தளிக்கின்றீர்கள். (என்று முழங்காற்படியிட்டு கேட்கிறாள்.)

புரூடஸ்: எழுந்திரு, போர்ஷியோ, அன்புள்ளவளே! எழுந்திரு.

போர்ஷியோ: தாங்கள் அன்புள்ளவராக இருந்தால் நான் அப்படிச் செய்ய வேண்டியிராது. உங்களிடம் புதைந்திருக்கும் சில இரகசியங்களை தெரிந்து கொள்ளகூடாதென்று நமது மண ஒப்பந்தத்தில் ஏதாவது விதிகள் உண்டா? உங்

களுக்கு இன்பமூட்டவும், வேடிக்கை செய்யவும், உணவு சமைக்கவும் மட்டிலுந்தான் எனக்கு உரிமை யென்ருல், போர்ஷியோ புருடஸின் கௌரமிக்க மனைவி அல்ல, காமக்கிழத்தி!

புருடஸ்: போர்ஷியோ, நீ என் உண்மையான நேர்மையான மனைவி. என் உடலில் ஓடும் குருதி ஓட்டத்தைவிட அன்பாக நேசிக்கப்படுபவள் நீ.

போர்ஷியோ: அஃதுண்மையாயின் நான் அந்த இரகசியங்களைத் தெரிந்துகொள்ளல் வேண்டும்! நான் ஒரு பெண்தான் என்பதை ஒப்புக்கொள்கிறேன். எத்தன்மையான பெண்! வலிமை மிக்க போர் வீரன் புருடஸின் மனைவி, அதுமட்டிலுமா? பாரெங்கும் புகழ் திரட்டிய அறிஞன் காடோவின் மகள். இயற்கை சுபாவத்தில் நான் வலிவிழந்த பெண்தான். காடோவை தந்தையாகவும், புருடஸைக் கணவனுகவும் பெற்ற பின்புமா நான் வலிவற்றவள்! அன்ருெரு நாள் என் தூய்மையை வெளிப்படுத்த என் தொடையைக் கீறி பீரிட்டு வந்த ரத்தத் துளிகளாலேயே மெய்ப்பித்துள்ளேன். அவ்வளவு மன அடக்கம் கொண்ட நானு உங்கள் இரகசியங்களை வெளியிடப் போகின்றேன்.

புருடஸ்: ஆண்டவா, என் மனைவி அமைதி கொள்ளும் வகையில் என்னை ஆக்கமாட்டாயா?

(அதற்குள் யாரோ கதவைத் தட்டுகின்ருர்கள்)

புருடஸ்: போர்ஷியோ, கவனி, யாரோ கதவைத் தட்டுகிருர்கள். நீ உள்ளே போ; விரைவிலே தெரிவிக்கின்றேன். பையா லூஷியஸ், யாரது கதவைத் தட்டுவது?

(காஷியஸும், லிகாரியஸும் உள்ளே வருகின்றனர்.)

லூஷியஸ்: இந்த லிகாரியஸ் உங்களோடு பேச வேண்டுமாம்.

புருடஸ்: ஏன் நோயா? கைக்குட்டையை தலையில் கட்டிக் கொண்டிருக்கின்ருய்.

விகாரியஸ்: புரூடஸ் பணிக்கத்தக்க அருஞ் செயல் ஏதாவதிருந்தால் எனக்கு நோயில்லை.

புரூடஸ்: அத்தகைய செயல் ஒன்றுள்ளது, அதைக் கேட்கத்தகாதவனாய் நீ இல்லை.

விகாரியஸ்: ரோமாபுரி மக்கள் தொழுகின்ற கடவுளர்கள் ஆணையாக என் நோயைக் கழற்றி எறிந்து விட்டேன் ரோமின் ஜீவநாடியே! வலிமைமிக்க புரூடஸ்! மிகப் பழைய காலந் தொட்டு வந்த புராதனக் குடிப்பிறப்பே! என் துடிப்பில்லாத நரம்புகளைத் தட்டி விட்டாய். முடியாத காரியங்களோடு முட்டி மோதி பெரும் போர் நடத்தப் பணிக்கிறாயா? இன்றே செய்து முடிக்கிறேன், என்ன செய்ய வேண்டும்?

புரூடஸ்: வேறொன்றுமில்லை விகாரியஸ்; நோயாளிகளைக் குணப்படுத்தும் நல்ல செயல்.

விகாரியஸ்: அப்படியானால் நாமாகப் பார்த்து நோயாளிகளாக்க வேண்டிய நலமுள்ளவர்களும் சிலர் இருக்கின்றார்கள் அல்லவா?

புரூடஸ்: அதை நாம் போகும்போது பேசிக் கொள்ளலாம்.

விகாரியஸ்: சரி; நட. நான் என்ன செய்ய வேண்டும் என்பதறியாத ஒன்றைத் துணிவோடு செய்ய உன்னைப் பின் பற்றி வருகின்றேன். கட்டளைதான் தேவை எனக்கு.

புரூடஸ்: சரி; அப்படியானால் தொடர்ந்துவா.

## இறப்பு அழைக்கிறது

சீசரின் மனைவி கலிபூர்னியா இரவெல்லாம் தூக்கமில்லாமல் அமைதி யிழந்தாள்; கணவனைக் கொல்வதைப் போலவும், "காப்பாற்றுங்கள், சீசர் கொல்லப்படுகிறார்; விரைந்து வாருங்கள்; சீசரைக் காப்பாற்றுங்கள்" என்று துடிதுடித்து எழுந்திருக்கின்றாள்.

சீசர், மன்றம் போக புறப்படுகிறார். கலிபூர்னியா போக விடாது தடுக்கிறாள். இன்று மன்றத்திற்குப் போக வேண்டாம் என்று தடுக்கிறாள்.

சீசர்: தடுக்காதே கலிபூர்னியா. சீசர் செல்வான்! சீசரை பயங்காட்டும் எதுவும் அவன் முன்புறத்தே வந்ததில்லை. அப்படி ஏதாவது வந்து என் முகத்தைப் பார்க்குமானால் இடத்தை விட்டே ஓடி மறையும்.

கலிபூர்னியா: நான் எப்போதுமே குறி பார்த்ததில்லை. ஆனால் அறிஞர்கள் நேற்றிரவு நடந்ததாகச் சொல்லும் பல தீய செயல்களைக் கேட்கும் போது பயப்படுகிறேன். வீதியிலே பெண் சிங்கம் ஒன்று குட்டி போட்டதாம்; கல்லறைகள் எல்லாம் பிளந்து இறந்தோரை வெளியே தூக்கிப் போட்டதாம். வீரர்கள் அணிவகுத்து மேகங்களுக்கிடையே நின்று போரிட்டார்களாம். அந்தப் போரில் சிந்தப்பட்ட இரத்தம் சட்ட சபையின்மேல் தெளித்ததாம்; போர் முழக்கம் காற்றில் கலந்தோடிற்றும். இறந்தவர்கள் முணு முணுத்தார்களாம். குதிரைகள் கனைத்ததாம். இந்தப் பயங்கரமான உற்பாதங்களைக் கண்டு கலங்குகின்றேன்.

சீசர்: இந்த தோற்றங்கள் எல்லாம் சீசருக்கு மட்டும் சொந்தமானவையா அல்லது உலகத்துக்கே பொதுவானவையா? சீசருக்குத்தான் சொந்தமென்றால் அது ஆண்டவன் இட்ட கட்டளையாகும். அதை எங்ஙனம் மாற்றமுடியும்?

கலிபூர்னியா: மன்னர்கள் இறந்துபடும் போது விண்ணுலகே பற்றி எரிகின்றதே. பிச்சைக்காரர்கள் இறந்து விட்டால் விண் மீன்கள் எரிவதில்லையே.

சீசர்: கலிபூர்னியா, சாகப் பயப்படும் கோழைகள் பல முறை சாகின்றனர். சாவுக் கஞ்சாத வீரன் ஒருவன்தான் ஒருமுறை சாவை சுவைக்கிறான். மக்களுக்கு வரக்கூடிய சாவு வந்தே தீரும். அதற்கஞ்சி என்ன பயன்?

(வேலைக்காரன் ஓடி வருகிறான்.)

"என்ன?" என்று கேட்கிறான் சீசர். "இன்று தாங்கள் சபைக்குப் போகக் கூடாது" என்று அறிவித்தான்.

ஒரு ஆட்டைப் பலியிட்டார்களாம். அதற்கு நெஞ்சில்லையாம்.

*சீசர்:* சரி, அப்படியானால், சீசர் இன்று செனெட் சபைக்குப் போகவில்லையானால் நெஞ்சில்லாத கோழை என்று பொருள். அபாயங்கள் சீசரை நன்றாக அறியும், சீசர் அபாயங்களை விட அபாயமானவன் என்று. அபாயமும் சீசரும் இரட்டைப் பிறவி சிங்கங்கள். சீசர் அபாயங்களின் மூத்தோன். ஆகவே சீசர் இன்று செனெட்டுக்குச் செல்வான்.

கலிபூர்னியா: அந்தோ என் அருமைத் தலைவ! நான் அடைந்திருக்கும் பயத்தின் பொருட்டாவது இன்று தாங்கள் செனெட்டுக்குச் செல்ல வேண்டாம். அந்தணியை சபைக்கு அனுப்பி, இன்று தங்களுக்கு உடல் நலமில்லை என்று சொல்லுவோம்; உங்கள் பாதங்களைப் பிடித்துக் கெஞ்சும் இந்த அபலைக்கு இரங்குங்கள்.

*சீசர்:* சரி, உன்னை சந்தோஷப் படுத்துவதற்காக வீட்டில் தங்குவேன். கவலையை விடு. எழுந்திரு, தேஸியஸ். இங்கேயே இருக்கிறான். அந்தணிக்குப் பதில் இவன் போய் சொல்லட்டும். தேஸியஸ்! நான் இன்று செனெட்டுக்கு வர இயலவில்லையென்றால் பொய்யாகும். வரத் துணியவில்லை என்றால் அதைவிடப் பொய்யாகும். ஆகவே, வர விரும்பவில்லை என்று சொல்.

கலிபூர்னியா: சீசருக்கு உடல் நலமில்லை என்று சொல், தேஸியஸ்.

*சீசர்:* (சினத்தோடு) சீசர் பொய் சொல்வானா ? போர்க்களத்தில் நான் வெற்றிக்காகவும் பொய் சொன்னதில்லை. கிழடுகளுக்குப் பயந்து நான் ஏன் பொய் சொல்ல வேண்டும் ? வரமாட்டார் என்று சொல்.

தேஸியஸ்: நான் அப்படிச் சொன்னால் அவர்கள் நகைக்காமலிருக்க ஏதாவது காரணம் சொல்லுங்கள்.

*சீசர்:* காரணம் என்ன, எனக்கு விருப்பம் இல்லை என்று சொல்லுங்கள். அதுவே போதும் செனெட்டை மகிழ்விக்க. ஆனால் நீ அறிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புவதால் உனக்கு மட்டிலும் சொல்கின்றேன். என் சிலையை, நூறு

பேர்கள் சேர்ந்து கொண்டு உடைத்தார்களாம். அதிலே இருந்து வழிந்தோடிய இரத்தத்தில் குளித்தார்களாம். சிலர் கைகளைக் கழுவினார்களாம். இப்படிக் கனவு கண்டிருக்கிருள் கலிபூர்னியா. அதற்காகவே இன்று செனெட்டுக்குப் போகக் கூடாதென்று முழங்கால் மண்டியிட்டு கேட்டுக் கொண்டாள். அவளுடைய அச்சத்தைப் போக்கவே இன்று வீட்டில் தங்குவ தாக முடிவு செய்துவிட்டேன்.

தேஸியஸ்: தங்கள் மனைவியார் கண்ட கனவின் உட் பொருள் மாற்றி சொல்லப்பட்டிருக்கிறது. உங்கள் சிலை உடைக்கப்பட்டு குழாய்கள் மூலம் குருதி வெளிப்பட்ட தென் ருல், இதுவரை உங்கள் பராக்கிரமத்தால் மேன்மை யடைந் திருக்கும் ரோம் சாம்ராஜ்யம் மேலும் மேன்மையுடைய தங் கள் புத்துயிர் தரும் புனித இரத்தத்தை எதிர்பார்க்கின்றது என்று பொருள். அந்தக் குருதியை அடையாளமாகவும் புனி தப் பொருளாகவும் பெரியோர்கள் எடுத்துச் செல்வார்கள். இதுதான் அந்தக் கனவின் பொருள் சீசர்.

சீசர்: நல்ல விளக்கம் தந்துவிட்டாய்.

தேஸியஸ்: மேலும் செனெட் சபை இன்று தங்களுக்கு முடிசூட்டக் காத்துக் கொண்டிருக்கின்றது. சபையை ஒத்திப் போடுவதின் மூலம் அவர்களுக்கும் அந்த எண்ணம் மாறி விடவும் கூடும். எவனாவது ஒரு கோமாளி எழுந்து நின்று "சரி, செனெட்டை காலவரையரை யில்லாது ஒத்திப் போடுங் கள். 'சீசரின் மனைவி நல்ல கனவு கண்ட பிறகு கூடுவோம்" என்று கேலியாகவும் பேசலாம். அல்லது வேறொருவன் கள்ளன் எழுந்து, சீசர் பயந்துவிட்டான் என்று ஏளனம் செய்யவும் கூடும். இவை யவ்வளவும் நான் தங்கள் மேல் கொண்டிருக்கும் அன்பினுல் சொல்கிறேனே யன்றி வேறில்லை. நினைக்க வொண்ணுத இந்த அசம்பாவிதங்களுக்கு முன் என் பகுத்தறிவு பாழ்படுகிறது.

சீசர்: தேஸியஸ், தக்க நேரத்தில் நல்ல விளக்கம் தந்துவிட்டாய். கலிபூர்னியா — எவ்வளவு பைத்தியக்காரத் தனமாய் பொருள் கொண்டுவிட்டாய். உன் அச்சத்திற்கு நான்

அடிமைப்பட்டுவிட்டதற்காக வெட்கப்படுகின்றேன். என் உடுப்பு களை எடு. செனேட்டுக்கு இன்று சென்றேயாக வேண்டும்.

சீசர் புறப்படத் தயாராவதற்குள் பிபிளியஸ், திரிவோனியஸ், லிகாரியஸ், மெதல்லஸ், புருடஸ், சின்னு ஆகியோர் சீசரை அழைத்துச் செல்ல வந்து குழுமி விட்டனர்.

சீசர்: (அனைவரையும் பார்த்து வணக்கம் செய்து விட்டு) ஏது புருடஸ், இன்று இவ்வளவு சீக்கிரம் புறப்பட்டு விட்டீர்கள். என்ன மணி இப்போது ?

புருடஸ்: எட்டு அடித்தாயிற்று. சீசர், அந்தணியும் வந்தாயிற்று? இரவில் நெடுநேரம் தூங்கும் பழக்கமுடைய அந்தணி வந்தது மகிழ்ச்சிக் குரியதுதான். வாழ்க அந்தணி.

அந்தணி: வாழ்க சீசர் பெரியோய்!

சீசர்: ஏ, திரிவோனியஸ்! உன்னோடு நான் ஒரு மணி நேரம் பேச வேண்டும். என் பக்கத்திலேயே இரு.

திரிவோனியஸ்: அப்படியே யாகட்டும்.

சீசர்: நண்பர்களே, நாம் அனைவரும் உள்ளே செல்வோம். உட்காருங்கள். என்னோடு சிறிது மது அருந்துங்கள். பின்னே ஒன்று கூடி செனெட்டுக்குச் செல்வோம்.

புருடஸ்: (குடித்துவிட்டு) தோற்றேடிய போலி உருவங்களெல்லாம் உண்மை யுருவங்கள் ஆகாது சீசரே. புருடஸின் எண்ணம் அதை ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருக்கின்றது.

கொலைக்களம் அழைக்கிறது.

எல்லாம் செனெட்டுக்குச் செல்லும் நெடுவழியில் செல்கின்றனர்.

ஆர்டிமிதோரஸ் கடிதம்.

அன்புள்ள சீசரே! புருடஸிடம் எச்சரிக்கையா யிரு. காஷியஸை கவனத்தில் வை. காஸ்காவுக் கருகில் நெருங்காதே. சின்னுவின் மேல் ஒரு கண் வை. திரிவோனியஸை நம்பாதே. மார்க்ஸ் சிம்பரை நன்ருகக் கவனி. புருடஸ் உம்மிடம் நட்பா

யில்லே. லிகாரியஸுக்கு நீ கெடுதி செய்துள்ளாய் என்பதை மறந்து விடாதே. இவர்களனைவருக்கும் உள்ள ஒரே நோக்கம் உன்னைக் கொல்வதுதான். நீ அவர்கள் மேல் கொண்டிருக்கும் அளவற்ற நம்பிக்கை உன்னை சதிக் குழிக்கு அழைத்துச் செல்கிறது. எல்லாம் வல்ல இறைவன் உன்னைக் காப்பாற்றுவாளுக!

உங்களன்புள்ள,
ஆர்டிமிதோரஸ்.

இதைப் படித்துக் கொண்டே வரும் ஆர்டிமிதோரஸ் "சீசர் வரும் வழியில் நின்று இதைக் கொடுப்பேன். சீசர் இதை உடனே படித்தால் உயிர் தப்புவான். இன்றேல் ஊழ் அழைத்துச் செல்ல இறந்து படுவான்" என்று எண்ணிக் கொண்டே சீசரும் மற்றவர்களும் வரும் வழியில் நின்று கொண்டிருக்கின்றான்.

இதற்குள் புருடஸின் மனைவி போர்ஷியோ அமைதி இழந்தவளாய்—வேலைக்காரனை அழைத்து "பையா செனெட்டுக்கு ஓடு. இப்போது என்ன மணியிருக்கும்? ஒன்பதா, சரி ஓடு. எல்லாரும் செனெட் மண்டபத்தை யடைந்து விட்டார்களா—என்று பார். சீசர் முகம் மாறுபட்டிருக்கிறதா?—என் காதலர் புருடஸ் மெலிந்து காணப்படுகிறாரா என்பதை எல்லாம் அறிந்து வந்து சொல். ஏதோ செனெட் பக்கமாக இருந்து பயங்கரமான கூச்சல் காற்றில் கலந்து வருவதைப் போலத் தெரிகிறது. ஓடு, ஓடு" என்று அவனை அதட்டி அனுப்புகிறாள்.

முன்பொரு தரம் சீசரை ஒருவன் கண்டு மார்ச்சு பதினைந்து விழிப்பாயிருங்கள் என்று சொல்லியிருந்தான். அப்படிச் சொன்னவன் வழியிலே நின்று கொண்டிருந்தான்.

சீசர், அவனைப் பார்த்து, மார்ச்சு பதினைந்து வந்தாய் விட்டதே என்றான். அதற்கவன் "ஆம், வந்தாயிற்று. ஆனால் அது இன்னும் போகவில்லையே!" என்றான்.

அதற்குள் ஆர்டிமிதோரஸ் தன் கையிலிருந்த கடிதத்தை சீசரிடம் கொடுத்து உடனே படிக்கும்படி வேண்டினான். "தங்களுக்கு ஓய்விருக்கும் போது படிக்கலாம்" என்று தடுத்து விடுகிறான் புருடஸ்.

" ஆனல் சீசரே! உடனே என்னுடைய விண்ணப்பத்தைப் படியுங்கள்; தங்களுக்குச் சம்பந்தப்பட்டது; தாமதிக்காதீர்கள் சீசரே; உடனே படித்துப் பாருங்கள்."

" என்ன இந்த பையனுக்கு பைத்தியமா - விண்ணப்பத்தை வழியிலே கொடுப்பதுதான் நாகரீகமா - செனேட் சபைக்கு வர், படிக்கச் சொல்லலாம்" என்று காஷியஸ் கடிந்து கொள் கிருன்.

மற்றவர்கள் பின் தொடர, சீசர் சபைக்குள் நுழைகிருன். அங்கிருந்தவர்கள் எழுந்திருக்கின்றனர். சீசர் அமருகிருன். அப்போதிருந்த சூழ்நிலையில் சதி வெளிப்பட்டு விடுமோ என்றஞ்சுகின்றனர். புருடஸ் அவர்களுக்கு தைரியமூட்டு கிருன். அந்தணி சீசருக் கருகிலிருந்தால் காரியம் கெட்டு விடும் என்று கருதி திரிவோனியஸ் அந்தணியை பக்குவமாக வேறு பக்கம் அழைத்துச் செல்கின்ருன்.

"காஸ்கா! உன் வெட்டுதான் முதலில் விழவேண்டும்; விழிப் பாயிரு" என்று சொல்லி வைக்கின்ருன் புருடஸ்.

தேஸியஸ்: மெதல்லஸ்கிம்பர் எங்கே? அவனை முதலில் போய் சீசரிடம் தன் வழக்கைச் சொல்லச் செய்யுங்கள்.

புருடஸ்: ஆம்; அவன் அழைக்கப்படுகின்ருன்! நீங்களும் நெருங்கி அவனுக்காகப் பேசுங்கள்!

சின்ன: காஸ்கா, மறந்து விடாதே; நீதான் முதலில் கையை உயர்த்த வேண்டியவன்.

சீசர்: நாமெல்லோரும் தயாராய் விட்டோமா? நாம் விசாரிக்க வேண்டிய வழக்குகள் என்ன இருக்கின்றன? நானும் செனேட் சபையும் தீர்த்து வைக்க வேண்டியவை ஏதேனும் உண்டா?

மெதல்லஸ்கிம்பர்: மிகக் கீர்த்தி வாய்ந்த பெருந்தகை சீசரே! கிம்பர் உங்கள் சமூகத்தின் முன்பாக ஒரு வழக்கை உரைக்கின்ருன். (என்று முழங்கால் படியிட்டுக் கேட்கிருன்.)

சீசர்: கிம்பரே! நான் உன்னை இந்த செயலிலிருந்து தடுக்க வேண்டும். கெஞ்சுதலும் குழைவுகளும் சீசரின் உண்மை யான இரத்தத்தை மாற்றி விடாது. நீதி ஒழுங்கு இவற்றிலி ருந்தும் மாற்றி விடாது. சீசர் அப்படி சட்டத்திற்கு அப்பாற் பட்டு செய்தால், அந்த சட்டங்களெல்லாம் குழந்தைகளால் செய்யப்பட்ட சட்டங்களாக முடியும். இனிப்பான சொற்களும், தாழ்ந்து ஒடுங்கி நிற்கும் பாசாங்குத் தன்மைகளும் நாயைப் போன்ற குழைவுத் தன்மை யுடையதாகும்.

உன் சகோதரன் சட்டப்படி நாடு கடத்தப்பட்டிருக்கிருன். அவன் தண்டனையை மாற்றும்படி நியாயமில்லாத வழியில் கெஞ்சிக் கூத்தாடுகிருய். இந்த மனப் போக்குடைய உன்னை நான் நடக்கும் வழியில் கிடக்கும் நாயென மதிக்கின்றேன். சீசர் ஒரு நாளும் தவறிழைக்க மாட்டார் என்று தெரிந்து கொள். சீசர் செய்ததை மாற்றமாட்டார்; ஏனெனில் ஒன்றைச் செய் வதற்கு முன் தீர யோசித்துச் செய்துவிடுவதால்.

மெதல்லஸ்: எனக்காக என்னைவிட சுவையான சொற்கள் மூலம் சீசரைக் கேட்டுக் கொள்ள இச் சபையில் யாருமில்லையா? நாடு கடத்தப்பட்டிருக்கும் என் தம்பியின் விஷயமாக கருணை காட்டுவோர் யாருமில்லையா?

புரூடஸ்: சீசரே! உம் கரங்களை முத்தமிடுகிறேன். தற் பெருமைக்காக அல்ல. மெதல்லஸ்கிம்பரின் தம்பி ஏழை பெபிலியஸ்கிம்பருக்கு உம் வாயால் விடுதலை யளியுங்கள். உடனே அவன் நாட்டுக்குத் திரும்பட்டும்.

சீசர்: என்ன புரூடஸ்?

காஷியஸ்: சீசரே! மன்னியுங்கள்! பெருந்தகை சீசரே! மன்னியுங்கள்! என்று சீசரின் பாதங்களுக்குத் தாழ்வாக வணங்குகின்றேன்!

சீசர்: நானும் உங்களைப் போன்றவனுக இருந்தால் மனம் மாறுபடுவேன். அநியாயங்களுக்கு பிறரை இரக்கங் காட்டும்படி நான் வேண்டிக் கொள்ளும் இயல்புடையவனு? ஆனுல் நானும் உங்கள் நீதியல்லாத வேண்டுகோளுக்கு இரக்கங் காட்டுவேன்.

ஆனால் இந்த சீசர் அசையா நிலையுடைய துருவ நட்சத்திரம் போன்றவன் என்பதை நீங்கள் உணரவேண்டும்.

விண்ணகத்தில் எண்ணற்ற நட்சத்திரங்களிருக்கின்றன. எல்லாம் ஒளி விடுகின்றன. ஆனால், அவற்றுள் ஒன்றே ஒன்று தான் தன்னிடம் மாறாது நிலைத்திருக்கின்றது. அதைப்போல உலகத்தில் உள்ள மானிடர்களெல்லாம் சதையாலும் இரத்தத்தாலும் ஆனவர்களே! அறிவுள்ளவர்களே! ஆனால் அவர்களில் தன்னிலை மாறாது இருப்பவன் ஒருவனையே நான் கண்டிருக்கிறேன். அவன் தான் இந்த சீசர். பெபிலியஸ்கிம்பர் நாடு கடத்தப்பட வேண்டுமென்று அன்று உத்தரவிட்டேன். அதன்படியே செய்தேன்! அதையே இப்போதும் வலியுறுத்துகின்றேன்.

மெதல்லஸ்கிம்பர்: ஏ, சீசர்! (என்று அருகில் போகின்றான்.)

சீசர்: எட்டப் போ. நீ ஒலிம்பஸ் மலையைத் தூக்குவாயோ?

தேஸியஸ்: தகைவுடைய சீசரே!...

சீசர்: புருடஸ் பயனில்லாமல் மண்டியிட்டதை நீங்கள் காணவில்லையா?

காஸ்கா: என் கைகள் எனக்காகப் பேசுகின்றன என்று முதலில் காஸ்கா சீசரின் கழுத்தில் குத்துகிறான். சீசர் அவன் கையைப் பிடித்துக் கொள்கிறான். பிறகு பலர் குத்துகிறார்கள். கடைசியாக புருடஸ் குத்துகிறான்.

சதியில் சம்பந்தப்பட்டவர்கள் அறுபது பேர்கள். அவர்களில் இந்தக் கொலையில் நேரடியாகக் கலந்து கொண்டவர்கள் இருபத்துமூன்று பேர்கள். ஆளுக்கொரு குத்து குத்தியிருக்கிறார்கள். ஏனெனில் அவன் உடலில் பட்ட கத்தி குத்துக்களின் எண்ணிக்கை இருபத்து மூன்று.

(புருடஸ் தன்னைக் குத்துவதைக் கடைசியாகக் கண்ட சீசர்.)

சீசர்: நீயுமா புருடஸ்! ஆனால் சீசர் சாகட்டும். அப்படியா! (என்று சொல்லிக் கொண்டே பாம்பேயின் சிலைக்கடியில் குருதி வெள்ளத்தில் வீழ்ந்து விட்டான். செனேட் சபை

அங்கத்தினர்களும், பொது மக்களும், திகைத்து திக்குக்குப் பலராக ஓடுகின்றனர்.)

சின்னு: மாண்டது கொடுங்கோன்மை; வீழ்ந்தது பேராசை; முறிந்தது அடாதசெயலின் ஆணிவேர். விடுதலை! சுதந்திரம்! ஓங்குக! (என்று சொல்லிக் கொண்டே) ஓடுங்கள்! நகர மக்களுக்கு இதைச் சொல்லுங்கள்.

காஷியஸ்: சிலர் பொது மன்றத்துக்கு ஓடுங்கள். விடுதலை! சுதந்திரம்! உரிமைப்பேறு! எல்லாம் பெற்று விட்டோம் என்று கூவுங்கள்.

புருடஸ்: பொது மக்களே! ஓடாதீர்கள்; அமைதியாயிருங்கள். பேராசையின் கணக்கு தீர்ந்து விட்டது.

காஸ்கா: புருடஸ் நீங்கள் பொது மேடைக்குச் செல்லுங்கள்.

தேஸியஸ்: கூடவே காஷிஸாயம் செல்லட்டும்.

புருடஸ்: பெபிலியஸ் எங்கே?

காஸ்கா: இதோ; இந்த கலகத்திலிருந்து கொஞ்சம் ஒதுங்கியிருங்கள்.

மெதல்லஸ்: எங்களோடு இணைந்திருங்கள். சீசரின் நண்பர்கள் யாராவது பழி தீர்த்துக் கொள்ளப் போகின்றார்கள்.

*சீசர் கொலை படுவதற்கு முன் அந்தணியை வேறு பக்கம் அழைத்துச் சென்ற திரிபோனியஸ் வருகின்றான்.*

காஷியஸ்: அந்தணி எங்கே? பயந்து திகைத்து வீட்டிற்கு ஓடி விட்டான். குழந்தைகள் தாய்மார்கள் அனைவரும் பயந்தோடிக் கொண்டே "கால எல்லையின் கடைசிநாளோ இது!" என கத்துகிறார்கள்.

புருடஸ்: விதியே! உன்னை நாங்கள் நன்றாக அறிவோம். நாங்கள் சாவோம் என்பதையும், நாங்கள் நன்றாகவே உணர்ந்திருக்கின்றோம். மக்கள் கால எல்லையின் கடைசி கோட்டிலே நிற்கிறார்கள் என்பதையும் நாங்கள் அறியாமலில்லை.

காஷியஸ்: ஏன் தன் முழு ஆயுளில் இருபதாண்டுகளைக் குறைத்துக் கொள்பவன் இருபதாண்டுகள் அஞ்சி வாழ வேண்டிய பயத்தைக் குறைத்துக் கொள்ளுகிறான் என்று பொருள்.

புருடஸ்: ஆம்; அது ஒப்புக்கொள்ளக் கூடியதே. அந்த வகையில் சீசரின் வாழ்நாளைக் குறைத்த நாம் பெரிய உதவி செய்தவர்களாவோம். இந்த அரும் பணியில் ஈடுபட்டோரே! குனியுங்கள்; சீசரின் இரத்தத்திலே கைகளை நனையுங்கள். அந்த கொடுமை நிறைந்த இரத்தத்தை எடுத்து நமது வாட்களுக்குப் பூசுவோம். அந்த வாட்களை தலைக்குமேல் தூக்கி விரைவாக பொது மன்றத்திற்குச் செல்வோம். அங்கே விடுதலை, சுதந்திரம், சாந்தி காப்பாற்றப்பட்டதென்று முழங்குவோம்.

காஷியஸ்: பல காலங்களுக்குப் பின்னும், இன்னும் புதியதாகத் தோன்றப்படும் நாடுகளிலும் இன்று நாம் செய்திருக்கின்ற இப்புனித காரியம் நடித்துக் காட்டப்படட்டும்.

புருடஸ்: தூசினும் கேவலமாக பாம்பேயின் சிலைக்கடியிலே வீழ்ந்திருக்கும் சீசர் விளையாட்டாக எத்தனை முறை குருதி கொட்டப் போகின்றாரோ.

காஷியஸ்: நம் நாட்டிற்கு விடுதலை தந்த மனிதர்கள் என்று போற்றப்படுவோம். நாம் சிறந்த துணிவுடைய உள்ளமுடையவர்கள் என்று வாழ்த்தப்படுவோம் என்று சொல்லிக் கொண்டே எல்லாரும் புருடஸின் பின்னால் நடக்கின்றனர்.

## அந்தணி புலம்பல்

அந்தணி: பேராற்றல் மிக்க சீசரே! இவ்வளவு கேவலமான நிலையிலா கிடக்கிறாய். கோர மரணம் உன்னை வென்று விட்டதா? வெற்றி மேல் வெற்றி பெற்ற வீர வேங்கையே! வெற்றி உன்னிடமிருந்து விடை பெற்றுக் கொண்டதா—மூச்சோடு அதுவும் முகம் மூடிக்கொண்டு ஓடி விட்டதா? ஆருயிர் நண்பனே! தாயில்லா சேயாயிற்று நாடு. அந்தோ குவலயம் போற்றிய குணக் குன்றே? உன்னையா இக்குருதி வெள்ளம் மறைத்து விட்டது.

நீ பெற்ற வெற்றிகள், நீ செய்த அருஞ் செயல்கள், நீ அடைந்த பெருமைகள், நீ நடந்த சிங்க நடை எல்லாம் இச் சிறிய அற்ப செயலுக்குள் அடங்கி விட்டனவா ?

அந்தோ காலமே ! பெருந்தகை சீசரே ! உன்னை அடையாளம் தெரியாமல் கொன்று விட்டார்களா ? எதிரிகள் கையால் சுழற்றிய வாட்களிலிருந்து கிளம்பிய மின்னொளி காலமே, உன் கண்களைக் குருடாக்கி விட்டதா ? தலைவ ! " திரும்பவே மாட்டேன் " என்ற வைராக்கியத்தோடு படுத்துக் கொண்டிருப்பதைப் போலிருக்கிறதே; அப்படியாயின், "போய்வா" என்று இந்த பொல்லாத வாயால் விடை தந்துதான் தீர வேண்டுமா ?

இன்னும் யார் யாரைக் கொல்ல வேண்டுமோ — எவனெவன் அந்த கோரக் கொலைக்கு ஆளாக வேண்டுமோ? அவர்களில் நானும் ஒருவனாக இருந்தால், என் தலைவர் சீசர் இறந்த இந்த நேரத்தைத் தவிர, வேறு நல்ல நேரமுமில்லை. அவரைக் கொன்று குருதி படிந்திருக்கும் வாட்களைவிட வேறு வாட்களுமில்லை. என்னை நீங்கள் வெறுப்பீர்களானால், இரத்தம் தோய்ந்த சூடாராத உங்கள் கைகளாலேயே உங்கள் வேலையை முடித்துவிடும்படி மிகத் தயவாய்க் கேட்டுக் கொள்கின்றேன். இன்னும் நான் எத்தனை யாண்டுகள் வாழ்ந்தாலும், இப்போதிறப்பதைப் போன்ற சாவு எனக்கு எப்போதும் கிடைக்கப் போவதில்லை. உலகில் மிகச் சிறந்த பெருந்தகையோனைக் கொன்ற உங்கள் கரங்களால் ஏற்படுகிற மரணத்தைத் தவிர, மற்ற எவ்வகையால் ஏற்படுகிற சாவும் எனக்கு அவ்வளவு மகிழ்ச்சியைத் தராது. கொல்லுங்கள்; தலை குனிகிறேன்.

புரூடஸ்: (அதட்டிய குரலோடு) அந்தணி ! உன் சாவை நாங்கள் விரும்பவில்லை. ஆகவே உன்னை சாகடிக்கும் எண்ணம் எங்களுக்கில்லை. இப்போது நாங்கள் செய்த கொலையையும், அதனால் இரத்தக் கரை படிந்திருக்கும் எங்கள் கைகளையும் பார்த்தே நாங்கள் கொலைகாரர்களாகவும், இரத்த வெறியர்களாகவும் உனக்குப் படுகிறது. இரத்த வெள்ளோட்டத்

தைப் பார்க்கிருய். எங்கள் உள்ளங்களைக் காண்கிருயில்லை. அவை இரக்கமுடையன. அந்த இரக்கமும் சாதாரணமான தல்ல, நம் பெருமைக்குரிய தாயகமாம் ரோம் நகரில் ஏற்பட்ட இன்னலால் ஊற்றெடுத்தோடுகிற இரக்கம்; அந்த இரக்கமே, நீ, இரக்கமென்று போற்றுகிற இரக்கத்தின் சின்னமாம் சீசரைக் கொன்றது! நெருப்பை நெருப்பே அழிப்பதைப் போல! அந்தணி! உன்னைப் பொறுத்தவரை எங்கள் கையில் உள்ளவை கூர் மழுங்கிப் போன வாட்களே எங்கள் பலம் குன்றிவிட்டதைப் போல் காணப்படுகிறது. உள்ளம் சகோதரத் தன்மையுடையதாய் விட்டது.

காஷியஸ்: புதிய மரியாதைகளைத் தேர்ந்தெடுப்பதில் உன்னைவிட வல்லவன் எவனும் இல்லை.

புரூடஸ்: பயத்தால் அமைதியிழந்து தவிக்கும் மக்களை அமைதி படுத்தும்வரை பொறு! பிறகு சீசரை அன்போடு நேசித்த நான் ஏன் இவ்வாறு செய்தேன் என்பதை காரணங்காட்டிச் சொல்கின்றேன்.

அந்தணி: உங்களில் யாருடைய அறிவுத் திறனையும் நான் சந்தேகிக்கவில்லை. உங்களுடைய இரத்தம் தோய்ந்த கைகளை எனக்குக் கொடுங்கள். அன்புள்ள புரூடஸ்! முதலில் உன் கை, அடுத்து காஷியஸ், அதன் பிறகு தேஸியஸ், உன் கையைக் குலுக்குகிறேன். கிம்பர் எங்கே? உன் கையைக் கொடு, சின்ன, ஆண்மையுள்ள காஸ்கா, உன் கையை நீட்டு, திரிவோனியஸ், இதோ என் கை குலுக்கு; என் செய்வேன்? நான் சீசரின் இணைபிரியாத நண்பன். இரத்த வெள்ளத்தில் பிணக்கோலத்தோடு மிதந்து கொண்டிருக்கும் என் தலைவரை விட்டுப் பிரிந்த ஆவி, இந்த என் மானமற்ற செயலைக் காண நேர்ந்தால், அவரைப் பிரிந்தபோது அடைந்த துக்கத்தை விட அதிகமாகத் துக்கிக்கும். சீசர் உடலிலே காணப்படும் பல புண்களைப் போல் எனக்கும் பல கண்களிருந்தால் அத்தனை கண்களிலும் அழுகை நீர் பெருக்கெடுத்து ஓடும். அதுதான் நான் செய்யவேண்டியதும். ஆனல், நான் இன்று என்ன செய்து கொண்டிருக்கின்றேன். சிங்கத்தின்

ஆற்றலிலும் மேலான சீசரே! உம்மைக் குத்திக் கொன்று கீழே சாய்த்த பகைவரோடு கைக்குலுக்கிக் கொண்டிருக்கிறேன். இதுவா நான் செய்ய வேண்டியது? என்ன செய்வேன்? ரோம் நகரத் தந்தையே! உன்னைக் கொன்ற கொடியோர்கள் நீ கொட்டிய குருதியின் நிறம் பெற்று நிற்கின்றனர். உலகமே! நீ இந்த மானுக்குக் காடானாய்; உலகமே! நீ கண்ட ஒரே மகாப் பெரியோன் சீசர் பல அரசர்களின் அம்படி பட்ட மான்போல் இங்கே கிடக்கிறான்.

காஷியஸ்: (கோபமாக) அந்தணி!

அந்தணி: காஷியஸ், என்மேல் கோபங் கொள்ள வேண்டாம். சீசரின் பகைவர்களே கூட அவனை இவ்வாறு புகழ்வார்கள். நண்பன் என்ற முறையிலே நான் சொல்லுவதா தவறு?

காஸியஸ்: சீசரை நீ புகழ்வதற்காக நான் கவலைப்படவில்லை; ஆனால், நீ எங்களிடம் எவ்விதத் தொடர்பு கொள்ள விரும்புகிறாய் என்றுதான் எங்களுக்குத் தெரியவில்லை. எங்களோடு நட்பாயிருக்க விரும்புகிறாயா? அல்லது நாங்கள் உன்னை வெறுத்தொதுக்கி மேலே செல்லவா?

அந்தணி: காஷியஸ்! மன்னிக்க வேண்டும். சீசரை இந்த பயங்கர கோலத்தில் கண்டதால் ஏற்பட்ட மன அதிர்ச்சியால் இப்படி பேசிவிட்டேன். உங்களிலே கலந்த நண்பன் நான். அதனாலேதான் உங்கள் ஒவ்வொருவருடைய கையையும் குலுக்கினேன். சீசர் எந்த இடத்தில் எப்போது, எதற்காக தவறிழைத்தார் என்ற உண்மையை விளக்குவீர்களாயின் மன ஆறுதலடைவேன். முதலில் அதைச் செய்யுங்கள் நண்பர்களே!

புருடஸ்: அந்தணி! நாங்கள் செய்தது மிருகச் செயல் என்றெண்ணுகிறாயா? உண்மை காரணங்களைச் சொன்னால், நீ சீசரின் உண்மையான மகனாயிருந்தால் கூட கோபப்படுவாய். இந்தக் கொலையில் நமக்கு பங்கு கிடைக்கவில்லையே என்று வருந்துவாய்.

அந்தணி: ஆருயிர் நண்பா! அதுதான் நான் வேண்டுவது. மேலும் சீசரின் உடலை பொது மன்றத்திற்கு எடுத்துச் சென்று மக்களுக்கு காட்டும் உரிமையையும், நான் சீசரின் யோக்கியமுள்ள நண்பன் என்ற முறையிலே, அவனுடைய ஈமச் சடங்கிலே பேசும் உரிமையையும் அளிக்க வேண்டுமென்று உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

புரூடஸ்: நீ அவ்வாறு செய்யலாம். (காஷியஸ் புரூடஸை தனியாக அழைத்துக்கொண்டு போய்)

காஷியஸ்: புரூடஸ்! சில நேரங்களில் உன்னை அறியாமலே உணர்ச்சி வசப்பட்டு சில தவறுகளைச் செய்து விடுகிறாய். அந்தணிக்கு நீ அந்த உரிமையை வழங்கலாமா? அவன் பேச்சில் மக்கள் எவ்வளவு வசப்படுவார்கள் என்பதை நீ அறிய மாட்டாயா? அனுமதிக்காதே.

புரூடஸ்: காஷியஸ்! பொறுமைப்படாதே. சீசரைக் கொன்றதற்குள்ள காரணங்களை நானே முதலில் மேடையில் விளக்கிச் சொல்லிவிட்டு, அந்தணி நாம் அளித்த உரிமையின் பேரால்தான் பேசுகிறான் என்பதையும் சொல்லி வைப்பேன். ஈமச் சடங்குகளுக்குள்ள எல்லா பொறுப்புகளையும் அவனிடமே ஒப்படைப்பித்திருப்பதாகவும் சொல்லி விடுகிறேன்.

காஷியஸ்: அதனால் என்ன விளையுமோ எனக்குத் தெரியவில்லை. நான் உண்மையாகவே அதை விரும்பவில்லை.

புரூடஸ்: அந்தணி, இந்தா, சீசரின் உடலை எடுத்துச் செல்; உன் பேச்சில் சீசரைப் புகழ்ந்து எது வேண்டுமானாலும் பேசலாம்; ஆனால் நீ எங்களை குறை கூறக்கூடாது. நான் பேசி முடிந்தபின் நீ அதே மேடையில் பேச வேண்டும்! தெரியுமா?

அந்தணி: அதுவே போதும், அதைவிட எனக்கு அதிகமாக எதுவும் வேண்டாம்.

புரூடஸ்: உடலை எடுத்துக்கொண்டு எங்களைப் பின் தொடர்ந்து வா.

அந்தணி: சீசர் சிந்திய இரத்தச் சேற்ருல் கரைந்து விட்ட மண் கட்டியே! என்னை மன்னிப்பாயாக! இந்த வெறியர் களிடம் நான் பயந்தும் பதுங்கியும் நடந்து கொண்டதற்காக என்னைப் பெரிதும் மன்னிக்க வேண்டும். கால வெள்ளத்தின் அலைகளிலே செத்தும் சாகாதிருந்த மிகப் பல பெருந்தகையோர் களின் சின்னம் நீ. ஊமைகளைப்போல் வாய் திறந்தும் பேச முடியாத நிலைக்கொப்ப குருதி கொப்பளித்துக் கொண்டிருக்கும் சீசரின் உடலில் இருக்கும் புண்களே! உங்கள் மேல் ஆணை யிட்டுச் சொல்கின்றேன். இனி என்ன நடக்கும் என்பவை களையும் முன்கூட்டியே சொல்லி விடுகின்றேன். ரோம் நகர சாம் ராஜ்ஜிய சமூகத்தின் மேல் ஒரு சாபம் சூழும். அது இதாலியின் எல்லா பாகங்களிலும் பரவும். கொலை செய்வதும் இரத்தஞ் சிந்து வதும் அவ்வளவு மலிவான செயல்களாய் விட்டனவா? அப் பேற்பட்ட கொடுஞ் செயல்கள் அன்ருட நிகழ்ச்சிகளாய் விட்டனவா என்று மக்கள் கொதித் தெழுவர். அந்த கொதிப் பேறிய உள்ளங்களே போர் வெறி நாய்களை கட்டவிழ்த்து விட்டு விடும். எங்கும் 'அழிவு' 'அழிவு' என்றே கத்தி, எங்கும் பிணக்காடுகளை உண்டாக்கி, அந்த பிணங்களைக் கல்லறையில் புதைத்த பின்னும் அந்த துர்நாற்றம் இந்தத் தரணியையும் தாண்டிச் செல்லும். அந்தோ! கரையற்ற காலமே! நீ எவ்வளவோ அழிவுகளைக் கண்டிருக்கின்ருய். இதை போன்ற ஒரு பேரழிவை எல்லையற்ற உன் காலப் பாதையில் கண்ட துண்டா? சொல். என் தலைவன்; ஏன் இந் நாட்டிற்கே தலை வன் சீசர் எங்கே பிழைபட்டான் என்று சொல்?

நகர மக்கள்: புருடஸ் பெரியோய்! சீசரைக் கொன்றதற்கு சமாதானம் கூற வேண்டும்.

புருடஸ்: கூறுகிறேன். காஷியஸ் நீ, அந்தத் தெருவிற்கு சென்று கூட்டத்தைப் பிரி; நீயும் பேசு. நகர மக்களே! காஷியஸ் பேச்சைக் கேட்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் அவனேடு செல்லுங்கள். என் பேச்சைக் கேட்கவேண்டுமென்று விரும்பு கிறவர்கள் என்னைத் தொடர்ந்து வாருங்கள். சீசரைக் கொன்ற தற்கான காரணங்களைக் கூறுவேன்.

ஒருவன் : நான் பெருந்தகை புரூடஸ் பேச்சைக் கேட்கப் போகின்றேன்.

மற்ருெருவன் : நான் இரண்டு பேருடைய (புரூடஸ், காஷியஸ்) பேச்சையும் கேட்டு ஒரு முடிவுக்கு வரப் போகின்றேன். அமைதியா யிருங்கள். அதோ புரூடஸ் பேசப் போகின்ருர்.

புரூடஸ் : நண்பர்களே! நல்ல ரோமானியர்களே! தாயக விடுதலைத் தாகங் கொண்டவர்களே! கேளுங்கள், அமைதியாகக் கேளுங்கள்; ஆரவாரம் செய்யாமல் கேளுங்கள். என் மேல் நம்பிக்கை வையுங்கள். என் பெருந்தன்மையில் நம்பிக்கை வையுங்கள். இந்த புரூடஸின் மேல் சீசர் வைத்த அன்பைவிட எந்த வகையிலும் இந்த புரூடஸ் சீசர் மேல் வைத்த அன்பு குறைவானதல்ல என்பதை நிலை நாட்டுகிறேன். அப்படியிருந்த சீசரின் ஆருயிர் நண்பன் புரூடஸ் ஏன் அவனுக்கெதிராகக் கிளம்பினுன்? இங்கேதான் உண்மைகளை சிந்தித்து சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். என்னை நீங்கள் நம்புவதற்கு முன்னுல் என் மாசற்ற செயலிலே நம்பிக்கை வையுங்கள். ஏன் நான் இந்த கொலையில் ஈடுபட்டேன். அதையும் நீங்கள் கவனிக்க வேண்டும். ரோமானிய சாம்ராஜ்ஜியத்தில் ஜுலியஸ் சீசர் ஒரு மனிதர்தான். என்ருலும் அவன் வீரத்திற்காக உயர்த்தினுேம்; அவனை நேசித்தோம். ஆனுல் இந்தக் கொலை எதைக் காட்டுகிறது? வெறும் மிருக வேட்டையைப் போன்றதல்ல. சீசரின் தசையை பறவைகளும் காட்டு விலங்குகளும் தின்று பசி ஆறட்டுமே என்ற நல்ல ஜீவகாருண்யத்தைச் சேர்ந்ததுமல்ல. அப்படி என்ருல் ஜுலியஸ் சீசர் மற்ற உயிரினங்களைவிட எந்த வகையிலும் குறைந்தவனல்ல என்பதை நான் உணராதவனுமல்ல. ஏன், உங்களுக்கே அது தெரியுமே. வெற்றி மாதாவின் வீர வாளாகத் திகழ்ந்தான் சீசர் என்பதை காற்றசைவு போல் கடந்து போகும் இந்தக் காலம் ஏற்க மறுத்தாலும் வருங்காலம் நிச்சயமாக ஏற்றுக் கொண்டே தீரும்!

கூட்டத்தில் ஒருவன் : கொன்றதற்குக் காரணம் கூறுங்கள்.

மற்றொருவன்: ஆம்; ஆம். அதைத்தான் நாங்களும் விரும்புகிறோம்!

புரூடஸ்: பொருமையா யிருங்கள். உண்மைக்கு வெகு சமீபத்தில் வந்து விட்டேன். இவ்வளவு பேரும் புகழுமுடைய சீசரை நான் கொஞ்சமாக நேசிக்கவில்லை. ஆனால், நண்பர் களே, ரோமானியர்களே, நான் சீசரைவிட நாட்டை அதிக மாக நேசித்தேன். சீசர் உயிரோடிருந்து எல்லாரும் அடிமை களாயிருப்பதைவிட சீசர் செத்துப் போய் எல்லாரும் சுதந்திர முடைய மக்களாய் வாழ்வதையே நான் விரும்பினேன். இந்த கருத்திலிருக்கின்ற உண்மையை சற்று சிந்தித்துப் பாருங்கள். என் ஒருவனுடைய சுயநலம் இதில் ஏதாவது தொக்கியிருக் கின்றதா — இந்தக் கொலைக்களத்தில் மறைந்திருக்கிறதா — இரத்தக் கறை படிந்த செழும் புழுதியில் புழுப்போல் நெளிந்து கொண்டிருக்கின்றதா—பாருங்கள். இல்லை; இல்லவே இல்லை. அப்படி எனக்கு ஏதாவது சுயநலம் இருக்குமானால், நான் சீசரைக் கொன்றிருக்க வேண்டியதில்லை. அவனை உயிரோடு வைத்தே பல வேலைகளை சாதித்துக் கொண்டிருக்கலாம். சீசர் யார்? நான் யார்? இருவரும் ரோமானியர்களே! ரோம் மாதா வை நாங்களிருவருமே இரத்தாபிஷேகம் செய்தவர்கள்தாம். கார்த்தேஜினியர் போரில் கை கோர்த்துச் சென்றவர்கள்தாம். போர்க்களத்தில் பலிபீடத்தை நோக்கி நின்று கொண்டவர் தாம். எனினும் நான் சீசரைக் கொன்றேன். ஏன்? என் தாயகத்தின் சிந்தை நோகாதிருக்க வேண்டும். நான் ரோமின் ஒரு உத்தம புத்திரன் என்ற வகையிலே ரோமின் சார்பாகக் கொன்றேன். ஆனால் இன்னும் எனக்கு "ஒரு அடாத செயலை செய்து விட்டோமே" என்ற அதிர்ச்சியே ஏற்படவில்லை. ஆனால் துக்கம் மேலிடுகிறது. அவன் என்னை நேசித்ததற்காக அழுகிறேன்; அவன் நல்ல வாழ்வை பெற்றிருந்ததற்காக நான் மகிழ்ச்சி யடைகிறேன். அவன் வீரத்தைப் போற்றுகிறேன். அவன் பேராசைக்காரனாக ஆனான்; அதற்காகக் கொன்றேன். அவன் அன்புக்குக் கண்ணீர்! அவன் புகழுக்கு மகிழ்ச்சி!! அவன் பேராசைக்குச் சாவு!!! இங்கே, இந்தக் கூட்டத்தில் இந்த மக்கள் வெள்ளத்தில் எவனாவது அடிமையாக இருக்க

விரும்புகிருனு — அப்படி எவனுவது ஒருவன் இருந்தால் அவனைப் பொறுத்தவரையில், அந்த அடிமையைப் பொறுத்த வரையில் நான் குற்றம் செய்தவன்தான். வீர ரோமானியனுக இல்லாத, விடுதலையை விரும்பாத, உரிமையைப்பற்றிக் கவலைப் படாத நாகரீகமற்ற அடிமை எவனுவது இந்த கூட்டத்தில் இருக்கின்ருனு? அப்படி எவனுவது ஒருவன் இக்கூட்டத்தில் இருப்பாளுனுல், அவனைப் பொறுத்தவரை நான் குற்றம் செய்த வன்தான். இங்கே தன் தாய் நாட்டுப் பற்றில்லாத கொடியவன், கோழை, குள்ளமதியோன் எவனுவது இருக்கின்ருனு? அப்படி ஒருவன் இங்கே இருப்பாளுனுல், அவனைப் பொறுத்தவரை நான் குற்றம் செய்தவன்தான். அப்படி எவனுவது இருக்கின்ருனு; அப்படி எவனுவது இருக்கின்ருனு; சொல்லுங்கள். அஞ்சாது முன் வந்து சொல்லுங்கள். உங்கள் பதிலை எதிர்பார்த்து என் பேச்சை நிறுத்துகிறேன்.

ஒருவன்: ஒருவனு மில்லை.

மற்ருெருவன்: இருக்க மாட்டான்.

இன்ெனுருவன்: அப்படி ஒருவன் இருக்க முடியாது.

புரூடஸ்: அப்படியாளுனுல் நான் யாருக்கும் தீங்கிழைக்க வில்லை. இந்த புரூடஸ் செய்தது மன்னிக்க முடியாத குற்றம் என்று கருதி, என்ன தண்டனை விதிக்க எண்ணியிருப்பார்களோ அதைவிட நான் ஒன்றும் அதிகமாக சீசருக்குச் செய்துவிட வில்லை. அவன் சாக வேண்டுமென்பதை நாங்கள் பலர் கூடியே முடிவு செய்தோம். அதனுல் அவனடைந்த பெருமைக்கு நாங்கள் பங்கம் விளைவிக்கவில்லை. அந்த பெருமைக்கும் புகழுக் கும் அவன் தக்கவனே. அவன் ரோமின் அமைதிக்குக் கேடு செய்ததைப் பெரிதாக்கி முன் வைக்கவில்லை.

ஒருவன்: வாழ்க புரூடஸ்!

புரூடஸ்: அதோ! அந்தணி அழுத கண்களோடு அலறும் குரலோடு, அதிர்ச்சியுற்ற மனதோடு சீசர் உடலைக் கொண்டு வருகின்ருன். இந்த கௌரவமிக்க கொலையில் அந்தணிக்கு பங்கில்லை. பாவம், அவ்வளவு துர்ப்பாக்கியனுய் விட்டான்.

சீசரின் சாவால் ரோம் நாட்டுக்கு ஒரு நன்மை யுண்டு. அந்த நன்மையில் உங்களில் ஒவ்வொருவருக்கும் பங்குண்டு. ரோமின் நலத்திற்காக நான் அஞ்சாது சீசரைக் கொலை செய்தேன். அதே ரோமின் நலத்திற்காக என் உயிர் வேண்டுமானாலும் தரத் தயாராக இருக்கிறேன். இதோ இந்த வாள் தான் சீசரைக் கொன்றது. அந்த வாளால் வேண்டுமானால் என்னைக் கொல்லுங்கள். அந்த புனிதச் செயலுக்கு என் வாளே பயன்படட்டும்; வருகிறேன்.

ஒருவன் : புருடஸ் நீடுழி வாழ்க !

மற்றொருவன் : புருடஸ் சீசராக இருக்கட்டும்.

இன்னொருவன் : தக்க மரியாதையோடு புருடஸை வீட்டுக் கழைத்துச் செல்வோம் !

வேறொருவன் : ஆரவாரம் முழங்கட்டும். புருடஸ் பெருந்தகையோய் புறப்படுங்கள். தங்களை வீட்டில் விட்டு வருகின்றோம்.

புருடஸ் : வேண்டாம், என்பாலன்புள்ளம் கொண்ட வீர ரோமானியர்களே ! வேண்டாம். நான் அவ்வளவு பெருமைக் குரியவனல்ல. நான் தனியாகவே வீட்டிற்குச் செல்கிறேன். நீங்கள் அனைவரும் இங்கேயே இருங்கள். என்னைத் தவிர, வேறு யாரும் இங்கிருந்து வெளியேறக் கூடாது. சீசரின் பிரேதத்திற்கு மரியாதை செலுத்துங்கள். அவனடைந்திருந்த மங்காத புகழைப் பாடுங்கள். சீசரைப்பற்றி அந்தணி பேசுவதைக் கேளுங்கள். ஆறு மனத்துயரால் அந்தணி நாம் செய்த இந்த புனிதமான கைங்கர்யத்தில் பங்கு பெற முடியவில்லையே என்ற துக்கம் ஒரு பக்கம் வாட்ட, ரோம் சாம்ராஜ்ஜிய விடுதலை வீரர்கள் பட்டியலில் தன் பெயர் சேரவில்லையே என்ற கவலை ஒரு பக்கம் வாட்ட, பேச முடியாத சீசரின் முன்னால் பேசுவதற்காக நின்று கொண்டிருக்கின்றான். அவன் சீசரை மட்டும் புகழ்ந்து பேசவும், அதே நேரத்தில் எம்மை இகழாதிருக்கவுமான உறுதி பெற்று பேச ஒப்புக்கொண்டிருக்கின்றான். இறப்பில் எவரையும் நீக்குதல் கூடாதென்ற பெருந்தன்மையோடு

அவனுக்குக் பேச உரிமை தந்திருக்கின்றேன். ஆகவே அவன் பேசுவான். எல்லாரும் இங்கிருந்து கேளுங்கள். நான் போய் வருகிறேன்.

கூட்டத்தில் ஒருவன் : புரூடஸ் பெருந்தகையோய்! சென்று வருக. உங்கள் ஆணைப்படி அந்தணி என்ன சொல் கிருன் என்பதைக் கேட்போம்.

மற்ருெருவன் : கேளுங்கள். உஷ்; அமைதி. அந்தணி மேடைக்குச் செல்கிருன்.

( மேடைக்குச் சென்ற அந்தணி )

அந்தணி : தகைவுடைய ரோமானியர்களே! நான் புரூடஸின் அருளாலும் அனுமதியாலுந்தான் பேசுகிறேன்.

வேருெருவன் : ஆம். அவன் அருளால்தான் பேசு கிருய் அந்தணி; ஆனல் அவனைப்பற்றி நீர் ஒன்றும் இகழ்ந் துரைக்கக் கூடாது.

அந்தணி : இல்லை. நீதி யறிந்த ரோம் நாட்டு பெருங்குடி மக்களே! இல்லை. நான் அப்படிப் பேசப்போவதில்லை.

வேருெருவன் : ஆம். எச்சரிக்கை செய்கிருேம். நீர் புரூடஸைப்பற்றி எதுவும் தவருக பேசாதிருத்தல் நலம். சீசரை ஒழித்து நமக்கெல்லாம் விடுதலையைப் பெற்றுத் தந்தவன் புரூடஸ் பெரியோன்.

இன்னெருவன் : பொறுங்கள். ஆத்திரத்தால் அறிவை இழந்துவிடக்கூடாது. அந்தணி என்ன சொல்கிருன் என் பதையும் கேட்போம்.

( அந்தணி மேடைமீது நின்று பேச்சைத் தொடங்குகின்ருன்.)

அந்தணி : தக்காரும் மிக்காருமில்லாத தகையுடைய ரோமானிய மக்களே! ரோம் நாடு பெற்றிருந்த அரசியல் மேன்மையை மத்தியதரைக் கடல் மேட்டில் நின்று வெற்றிச் சங்க முழங்கிய வீரப் பெருமக்களே! அமைதியாகக் கேளுங்கள்.

ஜெகமஞ்சப் போரிட்ட ஜூலியஸ் சீசரின் பிணத்தின் முன்னே நான் நின்று பேசக்கூடிய உரிமையையும் பெருந்தகை புருடஸ் தான் எனக்களித்தான் என்பதை நான் மறுக்கவே இல்லை. அதைக் கேட்கும் உரிமையும் உங்களுக் களித்தவனும் அவன் தான். நான் இங்கே சீசரைப் புதைக்க வந்திருக்கிறேன். புகழ்ந்து கூறுவதற்கல்ல; மனிதர்கள் இறந்த பிறகும் அவர்கள் செய்த நன்மைகளும் தீமைகளும் உயிரோடிருக்கின்றன என்பார்கள். ஆனால் ரோம் அரிமா ஜூலியஸ் சீசரின் விஷயத்தில் மட்டிலும் அது முற்றிலும் மாறிவிட்டது. ஏனெனில், சீசர் இறந்த பிறகு இல்லை, இல்லை, இறக்கச் செய்த பிறகு அவன் செய்த நன்மைகள் அவன் மூச்சோடு மறைந்துவிட்டன. அவன் செய்த தீமைகளே உயிரோடிருக்கின்றன. அவனடைந்த புகழ், அவன் பெற்ற வெற்றிகள் அவ்வளவும் அவனது உடலோடு வைத்து புதைக்கப்பட்டுவிடும். அந்தோ காலமே! நீ சீசரை ஏமாற்றி விட்டாய்!

என் அருமை நண்பர்களே! சீசர் பேராசைக்காரனாக இருந்தான் என்று பெருந்தகை புருடஸ் கூறினார். அஃது உண்மைதானென்றால், சீசர் அடைய வேண்டிய தண்டனையை அடைந்தார். சந்தேகமில்லை. சீசர், என் இணைபிரியாத நண்பர். அந்த அளவுக்குக் குறைந்த நட்பு கொண்டவர்கள் அல்ல புருடசும் மற்றவர்களும். ஆகவே அவர்களும் என் ஆருயிர் நண்பர்களே! சீசர் எங்கே பிழை பட்டார் என்பதை நாம் கவனிக்க வேண்டும். சீசர் பேராசைக்காரனாக இருந்தார் என்றார் புருடஸ். புருடஸ் அப்படிச் சொன்னதற்குக் காரணமில்லாமலிருக்க முடியாது. ஏன்? புருடஸும் நல்லவர், யோக்கியர். ஆனால், சீசர் பேராசைக்காரனாக இருந்தான் என்பதே அவருடைய குற்றச்சாட்டு. சீசர் பல நாடுகளை வென்று தந்தார். நம்மை இகழ்ந்தோரை சிறை பிடித்துக் கொணர்ந்தார். நமது பொது கஜானாவைப் பெருக்கினார். ரோம் நாட்டை ஒரு பெரிய வல்லரசாக்கினார். இவை எல்லாம், இந்த அருஞ் செயல்களெல்லாம், நினைத்தவர்கள் எல்லாம் செய்து முடிக்க முடியாத இந்த வீரச் செயல்களை எல்லாம் செய்து இரத்தத்தாலும்

வியர்வையாலும் நாட்டின் உயர்வை நான்கு திக்குகளுக்கும் எட்டச் செய்தானே சீசர். இதோ! இங்கே பிரேதமாய் கிடக்கிற சீசர்; இவன் பேராசைக்காரன்தானு ?

மக்கள் வாழ முடியாமல் வதைப்பட்ட போதெல்லாம் வற்ருத கண்ணீர் சிந்திஞன் சீசர். இவரைத்தான் பேராசைக்காரன் என்கிருர் அப்பழுக்கில்லாத புருடஸ்—புருடஸ் பெருமைக்குரியவர், யோக்கியர்; என் அருமை நண்பர்—அவரை நான் குறை கூற வில்லே. சீசர் பேராசைக்காரஞக இருந்தான். பணம் சேர்ப்பதால் பேராசைக்காரன் என்கிருேம். பேராசையால் பணம் சேரும் என்கிருேம். இந்த இரண்டும் சீசர்பால் இருந்ததா ? இல்லே சீசர் தனக்கென்று பணம் சேர்த்தாரா? இல்லே. பணம் சேர்த் தார். அதை நான் மறுக்கவே இல்லே. யாருக்காக சேர்த்தார்? ரோம் நகர முன்னேற்றத்திற்காக; பொருளாதார முற்றுகை ஏற்படாதிருக்க ; ரோம் வறுமையால் வாடியது என்று யாருமே எந்த வெளி நாட்டுக்காரர்களுமே, எப்போதுமே கேலி செய்யா திருக்க ! நம் தாயகத்தின் செல்வ நிலேயைத் தங்கத் தொட்டிலிலே வைத்து சீராட்டித் தாலாட்டியவன் சீசர். இது பேராசையின் பாற்பட்டதா ? ரோம் பெருங்குடி மக்களே ! எண்ணிப் பாருங்கள்.

எனினும் சீசர் பேராசைக்காரஞக இருந்தான் என்று அழுத்தந் திருத்தமாக வலியுறுத்திக் கூறுகிருர் புருடஸ். சிறிது நாட்களுக்கு முன்னே இங்கே நாம் பெருமிதத்தோடு கொண் டாடினேமே லூபர் கால் பெரு விழா. அதில் நமது பாராட்டுதலே வெளிப்படுத்த எண்ணி நான் சீசருக்கு மூன்று முறை முடி புனேந்தேன். மும்முறையும் வேண்டாமென மறுத்து விட்டான் சீசர். இது பேராசையா என்பதைக் கூறுங்கள். மக்கள் ஒரு மனதாகத் தர ஒப்புக்கொண்ட கிரீடத்தைப் புனேந்து கொண்டு இந்த ரோமின் அரசஞகவே அவன் அரியாசனத்தில் வீற்றிருந் திருக்கலாம். இந்த புழுதியில் புரளவா 'வேண்டாம்' என்ருன். யாராலும் நெருங்க முடியாத சீசர்தன் நெருங்கிய நண்பர் களாலேயே கோரக் கொலே யுண்ணவா நாம் அன்று தரிக்க இருந்த முடியை வேண்டாம் என்ருன். இது பேராசைதானு?

என்பதை நீங்களே கூறுங்கள். எனினும் சீசரைப் பேராசைக் காரன் என்கிருன் புருடஸ். புருடஸ் மிகப் பெரியோன்! நல்ல வன். யோக்கியன். புருடஸ் பேசியதை மறுத்துப் பேச நான் இங்கே வரவில்லை. எனக்குத் தெரிந்ததைப் பேச வந்திருக் கின்றேன். மாவீரன் சீசர்பால் அன்பு கொண்ட ஒவ்வொரு வரும் செய்யத் தகுந்த வேலைக்கதிகமாக நான் எதையும் செய்ய இங்கே வரவில்லை. நீங்களனைவரும் ஒரு நாள் சீசர்பால் அன்பு கொண்டிருந்தீர்கள். காரணம் இல்லாமலா? இல்லை; காரணத் தோடுதான். அந்த காரணம் இன்று மறைந்து போய் உங்கள் கண்ணீர் சிந்தாமல் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறதே! ஏன்? இந்த கோரக் கொலையைக் கண்டும் கண்ணீர் சுரக்கவில்லை. அவ்வளவு கட்டாந் தரையாய் விட்டதா உங்கள் நெஞ்சம்? கருணை பறந்தோடி விட்டதா? நீதியே! நீ காட்டு மிருகங் களோடு கலந்து விட்டாயா? மக்களே! நீங்களுமா பகுத்தறிவை இழந்து விட்டீர்கள்? இன்று என் நிலை என் வசம் இல்லை. இதோ இந்த சீசரின் உதிர வாயோடு 'உடலோடு' ஒட்டிக் கொண்டிருக்கிறது. நிதானம் இழக்கிறேன். வேட்டையாடப் பட்ட இந்த சீசரின் உடலோடு ஒட்டிக்கொண்டிருக்கும் என் நினைவு திரும்பி என்னிடம் வந்து சேருகின்ற வரையில் நான் அசைவற்றிருக்க வேண்டும். புருடஸின் அபிமானிகளே! சீசரின் அன்பர்களே! ரோமின் கௌரவமிக்க பெருமக்களே! பொறுத்துக் கொள்ளுங்கள்.

ஒருவன்: இவன் சொல்வதில் பொருள் இருப்பதாகத் தெரிகிறது.

மற்றொருவன்: இவன் சொன்ன கருத்துக்களை நன்றாக சீர்தூக்கிப் பார்த்தால், சீசருக்கு பெரிய துரோகம் இழைக்கப் பட்டிருக்கிறது என்று புலப்படுகிறது.

வேறொருவன்: சீசரைக் கொல்ல சதி நடந்ததா? அப்படி யானல், சீசர் அடைந்த கதியை அவர்கள் அடைய வேண்டும்.

பிறிதொருவன்: அந்தணியின் பேச்சை நன்றாக கவனித் தீர்கள் அல்லவா? தக்க நேரத்தில் தகுந்த உண்மை ஒன்றை

புலப்படுத்தினுன். லூபர் கால் பெரு விழாவில் அளிக்கப்பட்ட முடியை ஏற்க மறுத்தான் சீசர். உண்மைதான். சீசர் பேராசைக்காரஞக இருந்தால் அந்த முடியை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டுமல்லவா? ஆகவே சீசர் பேராசைக்காரன் அல்ல என்பது உறுதியாகிறது.

வேருெருவன்: அப்படியாயின், பெருந்தகை சீசருக்கிழைத்த இக் கொடுமைக்காக பலர் தண்டனை யடைய வேண்டும்.

மற்ருெருவன்: பரிதாபத்துக்குரிய அந்தணி ஆருத் துயருற்று அழுதழுது கண்களை நெருப்புக் கோளங் களாக்கிக் கொண்டான். அந்தணியைவிட மிகச் சான்ருேன் ரோமில் எவனுமில்லை. அமைதி! அமைதி! மீண்டும் பேசத் தொடங்குகிருன்; கேளுங்கள்.

அந்தணி: சான்ருேர்களே! சால்புடைய பெருமக்களே! சவத்தின் முன்னுல் நிற்கும் பெருங்குடி மக்களே! ரோமர்கள் சிலர் ஒரு ரோமானிய வீரனைக் கொன்ருர்கள். இது சரித்திரம் சேர்க்கக்கூடியதுதானு? ரோம். அந்தோ! ரோம். உன் பெயரைக் கேட்டாலே சிலிர் சிலிர்த்து நின்ற சாம்ராஜ்யங் களிலே இன்று நீ சிரிப்புக்கு சந்தையாய் விட்டாய்.

நேற்று வரை இந்த சீசரின் சொல் நில உல கத்தையே எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையதாயிருந்தது. இப் போது அந்த பேராற்றல் மிக்க சீசரின் பிரேதம் இங்கே ஒரு வார்த்தையும் பேச முடியாமல் கிடக்கிறது. அவருக்கு நன்றி சொல்லும் கடமையுடைய நெஞ்சத்தார்கள் எவரும் இங் கில்லையா? உங்கள் உணர்ச்சிகளைத் தூண்டி கலகம் செய்ய வைப்பேனுயின், பெருமைக்குரிய புருடஸுக்கும், காஷிய ஸுக்கும் பெரும் பிழை இழைத்தவனுவேன். ஆகவே அவர் களுக்குப் பிழை செய்யமாட்டேன். அதைவிட எனக்கும் உங் களுக்கும் இங்கே விழிக்காத துயில் கொள்ளும் தூய சீசருக்கும் வேண்டுமானுல் பிழை செய்வதையே விரும்புகிறேன்.

இதோ! என்னிடம் இருக்கிறதே இந்த சுருள். இதை நான் சீசரின் அறையில் கண்டெடுத்தேன். சீசரின் முத்

திரையோடிருக்கிறது. இது உங்களுக்காக அவர் எழுதி வைத்து விட்டுப்போன வில். இதிலிருக்கும் கருத்துக்களைக் கேட்பீர்களானுல் — அந்தோ — மன்னித்துக் கொள்ளுங்கள். இதை நான் உங்களுக்குப் படித்துக்காட்டப் போவதில்லை. அப்படியே நான் துணிந்து படித்துக் காட்டி விட்டால், எல்லாரும் குனிந்து சீசரின் பிணத்தை முத்தமிடுவார்கள். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கைக்குட்டைகளால் சீசரின் உடலிலிருந்து கொப்பளித்து வரும் இரத்தத்தைத் தோய்த்தெடுத்துக் கொள்வார்கள். அவர் உடலிலே இருக்கும் ஒவ்வொரு ரோமத்தையும் நினைவுச் சின்னமாக எடுத்துக் கொள்வார்கள். அத்தகையோர் இறக்கும்போதும் அந்த அடையாளப் பொருள்களைத் தங்கள் சந்ததியார்களுக்கு மதிக்கத் தகுந்த பொருள்களாக, விலை மதிக்க முடியாத செல்வமாக உயிலெழுதி வைத்து விட்டு உயிர் துறப்பார்கள்.

கூட்டத்தில் ஒருவன் : அந்தணி ! அந்த உயிலைப் படி!

வேருெருவன் : ஆம்; நாங்கள் அதைக் கேட்க வேண்டும்; படியுங்கள்.

அந்தணி : பெருந்தகையீர் ! பொறுமையா யிருங்கள். அதனை நான் படிக்கக் கூடாது. படித்தால் என்ன அழிவு ஏற்படுமோ எனக்குத் தெரியாது. நீங்கள் கற்களுமல்லர்; மரக்கட்டைகளுமல்லர். சீசர் உங்களை எவ்வாறு நேசித்தார் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளாமலிருப்பதுதான் நல்லது. ஏனெனில், நீங்கள் ஆவேசமிக்க மனிதர்கள். படிப்பதைக் கேட்ட பின் செயலற்றிருப்பீர்கள் என்பது என் உறுதி. சீசரின் உண்மையான வாரிசுகள் நீங்கள்தான் என்பதை நீங்களறிந்தால் பெருத்த கலகம் ஏற்படும். அதன் பிறகு இந்த ரோமில் என்ன உற்பாதங்கள் நிகழுமோ யார் கண்டார்கள்?

ஒருவன் : முதலில் உயிலைப் படியுங்கள் ! அந்தணி, அதை நாங்கள் கேட்க வேண்டுமென்ற ஆசை அலை மோதுகிறது.

அந்தணி : அதைப் படித்தால் நீங்கள் அமைதியாயிருப்பீர்களா ? என்னுல் நம்பமுடியவில்லை. நான் சொல்லக் கூடா

தனைச் சொல்லி விட்டேன். இதன் மூலம் பெருமைக்குரிய புருடஸுக்கும் அவருடைய நண்பர்களுக்கும் பெருந் தீங்கு இழைத்து விட்டேன். அதற்காக நான் பயப்படுகிறேன். பெரு மக்களே ! மன்னித்து விடுங்கள்.

ஒருவன் : புரூடஸ் பெருந்தகையாளனு ? அந்தணி— மீண்டும் அந்தச் சொல்லே உச்சரிக்காதீர். அவர்கள் வஞ்ச கர்கள்.

மற்ருெருவன் : உயில், உயில், உயிலைப் படியுங்கள்!

அந்தணி : உயிலைப் படித்துத்தான் தீர வேண்டுமா ? அப் படியானுல் சீசரின் உடலை சுற்றி நில்லுங்கள். நானும் கீழே இறங்கி வருகின்றேன். தாராள சிந்தையோடு உங்களுக்கு உயிலை வைத்து விட்டுப் போனவனைக் காட்டுகிறேன்.

*( சீசரின் உடலைச்சுற்றி எல்லாரும் வளையமாக நிற்கின்ருர்கள் )*

அந்தணி : ரோம் நாட்டு வீரர்களே ! இரக்க சிந்தை யுடைய என் தாயகத் தோழர்களே ! சிந்துவதற்கு உங்களிடம் கண்ணீர் உண்டென்ருல் சிந்துவதற்குத் தயாராயிருங்கள். நீங்களனைவரும் இப்பெருந்தகையோனை அறிவீர்கள். அவ் வளவு காட்சிக்கெளியவனுக இருந்தான் அல்லவா ! இதோ அணிந்திருக்கிருனே மேலங்கி; இதைத்தான் அவன் முதன் முதலில் நம்மிடம் தோன்றியபோது அணிந்திருந்த அங்கி. எனக்கு நன்ருக நினைவிருக்கின்றது. பயங்கரப் போரில் செர்வி யர்களை வென்றபோது கோடை கால மாலை நேரத்தில் தன் கூடாரத்தில் அணிந்திருந்தது இதுதான். இந்தக் காயத்தைப் பாருங்கள். இதுதான் காஷியஸின் கூர்வாள் பாய்ந்த இடம். ஈர நெஞ்சமில்லாத காஸ்கா எவ்வளவு ஆழமாகத் தன் கொடு வாளால் குத்தியிருக்கிருன் என்பதை இங்கே கவனியுங்கள். இதோ ! இங்கே பாருங்கள். என் ஆருயிர் நண்பன் சீசர் என்று ஓயாமல் சொல்லிக்கொண்டிருக்கிருனே புருடஸ். ' அவன்

குத்திய இடத்தைப் பாருங்கள்! அவன் குத்திய வாளை வெளியே எடுத்த பிறகு ரத்தம் எவ்வளவு வேகமாக பீறிட்டு வருகிறது என்பதை, காருண்ய உள்ளம் படைத்தோரே பாருங்கள். பெருந்தகையாம் புருடஸ் என வாயார வாழ்த் தினீர்களே! அந்தப் பெருந்தகை புருடஸ்தான் சீசரின் உயிர் எவ்வகையிலும் திரும்பா வண்ணம் ஆழமாகக் குத்தியிருக் கிறான். நெஞ்சக் கொடுமை எவ்வளவு ஆழமாகப் பதிந்திருக் கிறதோ அவ்வளவு ஆழமாகப் பதிந்திருப்பதைப் பாருங்கள். புருடஸ் எவ்வளவு வெறுப்போடு குத்தினான் என்பதை அறி வதற்காகத்தான் ரத்தம் இவ்வளவு வேகமாக வெளியே ஓடி வருகிறது போலும். அழாதீர்கள்! நண்பர்களே! அழா தீர்கள்! சீசரின் முடிவுக்கு புருடஸ் கடவுளாகத் தோன்றினான். சீசர் புருடஸை எவ்வளவு நேசித்தான் என்பதை நாடறியும்; நாம் அறிவோம்; நீங்களும் அறிவீர்கள். அந்த நண்பன் குத்திய குத்துதான் இது. எவ்வளவு அன்பில்லாத குத்து. "அறமே! ஓடிப்போ" என்று அதட்டிக் குத்திய குத்து. "ஆண்மை யாளனே! அரிமாவே!" அழிந்து போ! என்று ஆவேசமாகக் குத்திய குத்து. "ரோம் நகரமே! நீ தலை குனி; அவமானத்தால் சாவு!" என்று ஆத்திரத்தால் குத்திய குத்து. பெருவீரன் பாம்பே சிலையானான். பெருந்தகை சீசர் இன்று பிணமானான். திக்கற்ற அனாதையாய் விட்டது ரோம். புருடஸ் குத்தும் போது சீசர் பார்த்தார். சதிக்காரர்களைவிட நன்றி கெட்டத் தனமே மிக்க வலிமையுடையது என்று தாங்க முடியாத அவ மானத்தால் முகத்தை மறைத்துக் கொண்டு, "நீயுமா புருடஸ்?" என்று சொல்லிக் கொண்டே பாம்பேயின் சிலைக்கடியிலே சாய்ந் தார். நாம் அனைவருமே வலிவற்று விழுந்து விட்டோம். சதியோ தலை தூக்கி நின்றது. அந்த துரோகச் செயலுக்கு முன்னால் பேராற்றல் மிக்க சீசரே வீழ்ந்து விட்டாரே! நம்மால் என்ன முடியும்? எல்லாருமே சந்துகளில் விழுந்து ஓடினோம். இப்போது நீங்களழுகிறீர்கள். தாயகத் தோழர்களே! என்ன கொடுமை இது? எத்தகைய வீழ்ச்சி? இரத்தவெறி பிடித்த துரோகத்திற்கு வழிவிட்டு நாமெல்லாருமே ஒதுங்கி நின்று விட்டோம். இப்போது இரக்கத்தின் சக்தியை உணர்கிறோம்.

பயன், சீசரை இழந்து விட்டோம். கண்ணீர்த் துளிகள் இந்தப் பாடுபடுகின்றன. கண்யவானின் உடல் இரத்த வெள்ளத்தில் கிடக்கும்போது நாம் கண்ணீர் சிந்திப் பயனில்லை.

(கூட்டத்தினருக்குக் கோபம் பிறந்து விட்டது. கொக்கரிக்கின்றனர்.)

ஒருவன் : பயங்கரமான காட்சி.

மற்றொருவன் : அந்தக் கொடியவர்களைத் தேடுங்கள். கொலைக்களத்துக்கு அனுப்புவோம்.

வேறொருவன் : ஓ! கொடிய காலமே! நீயும் எங்கள் கண்களைத் திறக்க மறந்து விட்டாயா?

இன்னொருவன் : புரூடஸ், காஷியஸ், காஸ்கா, கொடியவர்களே, கொளுத்துவோம் உங்கள் வீடுகளை. சீசரைக் கொன்ற பழிகாரர்களே! விட மாட்டோம் உங்களை. தேடித் தேடிக் கொல்வோம்; வெட்டுவோம். சதிக்காரர்கள் யாரும் இனி உயிரோடிருக்கக் கூடாது.

அந்தணி : நிதானத்தைக் கைவிடாதீர்கள். நண்பர்களே! உங்களை அவ்வளவு விரைவாகக் கலகத்துக்குத் தூண்ட மாட்டேன். இந்தச் சதியைச் செய்தவர்கள் பெருந்தகையாளர்கள். அவர்கள் இதைச் செய்வதற்கு என்ன சொந்தக் காரணங்கள் இருந்தன என்பதை நான் அறியமாட்டேன். என்றாலும் ஏதாவது தகுந்த காரணம் இல்லாமல் இதைச் செய்திருக்க மாட்டார்கள். அந்தக் காரணங்களை அவர்களே சொல்வார்கள்; கேளுங்கள். உங்கள் சிந்தையைக் கலக்கி செயலில் கொள்ள நான் இங்கு வரவில்லை. நான் அவ்வளவு சொற் செல்வனுமல்ல புரூடஸைப்போல. நான் ஒரு கள்ளமில்லாத நெஞ்சத்தான் என்பதை நீங்களறிவீர்கள். நான் எனது ஆருயிர் நண்பன் சீசரை நேசிக்கிறேன். இதை அவர்களும் அறிவார்கள். அதனால்தான் அவர்கள் என்னை இங்கே பேச அனுமதித்

தார்கள். மக்களுடைய குருதியை கொதிக்கச் செய்கின்ற ஆற்றலோ, அறிவோ, ஆவேசமிக்க சொல்லோ, தகுதியோ, திறமையோ, வண்மையோ என்னிடத்தில் இல்லை. ஆகவே தான் சீசரின் உடலிலே இரத்த ஊற்றூறடிருக்கும் புண்களைக் காட்டி அந்த ஊமை வாய்களை எனக்காகப் பேசுமாறு வேண்டு கிறேன். ஆனால் அந்த புருடஸ் அந்தணியாக இருந்து, இந்த அந்தணி புருடஸாக இருந்தால், உங்கள் உணர்ச்சிகளை எழுப்பி சீசரின் புண்கள் ஒவ்வொன்றையும் பேசுமாறுத் தூண்டி, ரோம் நகரத்தின் ஒவ்வொரு கல்லையும் எதிர்த் தெழுந்து புரட்சிக்குக் கிளம்புமாறு செய்ய அந்தணி ஒருவன் இருக்கிறான் என்று காட்டுவேன்.

கூட்டத்தினர்: புறப்படுங்கள். புருடஸ் வீட்டைக் கொளுத்துவோம். அவர்களில்—அந்த சதிக்காரர்களில் ஒருவரையும் விட்டுவைக்கக் கூடாது. பழிக்குப்பழி தீர்க்க வேண்டும்.

அந்தணி: அமைதி! அமைதி! இன்னும் கேளுங்கள்; நாட்டு மக்களே! இன்னும் நீங்கள் கேட்க வேண்டியது ஒன்றிருக்கின்றது. அதை உங்கள் ஆரவாரத்தில் மறந்தே போய் விட்டீர்கள். சீசர் உங்கள் அன்புக்கு எப்படி உரியவரானர் என்பதை நீங்கள் மறந்து விட்டீர்கள். உங்களனைவரையும் அவர் தம் சொந்த மக்களாகவே கருதினார். நான் முன்பு கூறினேனே வில்; அவர் முத்திரையோடு கண்டெடுக்கப்பட்ட உயில்; அதைப்பற்றி நீங்கள் மறுபடியும் எண்ணவே இல்லை போலும்.

கூட்டத்தில் ஒருவன்: உண்மைதான். உணர்ச்சிப் பெருக்கால் கடமையை மறந்து விட்டோம். எந்தையே, அந்தணி, எங்கள் ஆவலைத் தூண்டிய அந்த உயிலைப் படியுங்கள். நாங்கள் கேட்க வேண்டும்.

அந்தணி: அதற்குள் இப்படி ஆரவாரம் செய்கிறீர்களே; படிக்கிறேன் கேளுங்கள். இதில் சீசர் ரோமானியன் ஒவ்வொருவனுக்கும் தனித்தனி எழுபத்தைந்து பணம் அளிக்கிறார்.

கூட்டத்தில் ஒருவன் : மிகப் பெருந்தகையோன் சீசர். அவனை சாகடித்தவர்களை சாகடிப்போம்.

வேறொருவன் : தாராள சிந்தையுடையவர் சீசரே.

அந்தணி : இன்னும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டியது இருக்கிறது; அதையும் கேளுங்கள்.

மற்றொருவன் : அமைதி. அமைதி. அதையும் கேட்போம், சொல்லுங்கள், அறமே உருவான அந்தணியாரே! அதையும் சொல்லுங்கள்.

அந்தணி : அந்தப் பணம் மாத்திரமல்ல, டைபர் நதியின் இப்புறம் தனக்குச் சொந்தமான உல்லாசத் தோட்டங்கள், பழத் தோட்டங்கள் மரத் தோப்புகள், இன்னும் அதற்கு சம்பந்தப் பட்ட எல்லாவற்றையும் உங்களுக்கும் உங்கள் சந்ததியார் களுக்கும் சொந்தமாக்கியுள்ளார். நீங்களனைவரும் உங்கள் புத்திர பௌத்திர பாரம்பர்யமாய் ஆண்டனுபவித்துக் கொள்ள வேண்டியது என்று உங்களுக்கே சர்வ சுதந்திரத்தோடு விட்டிருக்கிறார். இப்படி ஒரு சீசர் இருந்தார். இனி எப்போது அப்படி ஒரு சீசர் இருப்பார்?

கூட்டத்தில் ஒருவன் : இனி ஒன்றுமில்லை. தந்தை சீசரே' இவ்வளவு குணக் குன்றாக இருந்தாயா? எம்மைவிட்டுப் பிரிந் தாயா? இனி உம்மைப் போன்ற ஒரு அருளாளனை எப்போது காணப் போகிறோம்? ஐயனே. ஆறாத்துயரடைகிறோம். எழுங் கள். சீலமிக்க சீசரின் உடலை எல்லாரும் கண்ணீரால் அந்த கண்யவானின் உடலைக் கழுவுவோம். அரிய இடத்தில் வைத்து எரிப்போம். அந்த வீரனின் சிதையிலிட்ட கொள்ளிக்கட்டை களைக் கொண்டே கொடியவர்களின் வீடுகளைக் கொளுத்து வோம். போங்கள் தீயைக் கொண்டு வாருங்கள். சாளரங்களை இழுத்து ஓடியுங்கள் என்று கூவிக் கொண்டே மக்கள் சீசரின் பிணத்தைத் தூக்கிக் கொண்டு செல்கின்றனர்.

அந்தணி : இது இனி தன் வேலையைச் செய்யத் தொடங் கட்டும், கொடுமையே! குறும்பே நீங்கள் நடமாடத் தொடங்கி

விட்டீர்கள். எந்த வழியில் செல்ல நினைக்கிறீர்களோ, அந்த வழியே செல்லுங்கள். (என்று சனத் திரளினைக் கட்டவிழ்த்து விட்டான் அந்தணி.)

மக்கள் நாலா பக்கங்களிலும் ஓடினார்கள். எதை செய்கிறோம் என்பதை யறியாமலே அழிவு வேலையில் இறங்கினார்கள். வழியில் போவோர் வருவோரை எல்லாம் சந்தேகக் கண் கொண்டு விசாரித்தார்கள். பகைவனா, நண்பனா என்று வழிப் போக்கர் பலரைக் கேட்டார்கள். நகரம் நிலை குலைந்து நின்றது. கணவனை இழந்த கைம் பெண் கோலத்தோடு ரோம் நகரம் தலை குனிந்து நின்றது. அடக்கமுள்ளோர் அங்காடிகளுக்கு வருவதை நிறுத்தி விட்டார்கள். வயோதிகர், பெண்கள், குழந்தைகள் நடமாட்டமே இல்லை. மயான அமைதி ஒரு பக்கமும், பயங்கரக் கலகங்கள் மற்றோர் பக்கமும் இருந்தது. செனேட் சபை இருள் சூழ்ந்து கொண்டது. புரூடஸின் பேச்சில் மயங்கினோர் அந்தணியின் ஆவேசமிக்க ஆணித்தரமான பேச்சால் தெளிவுபெற்று புலிகளெனப் பாய்ந்தனர். வீணர்களின் வீடுகளை எரித்து சாம்பலாக்கினர். நேரடியான தண்டனைக்குரியவர்கள் நகரைவிட்டே ஓடினர். பின்தொடர்ந்து ஒரு பெரும் சேனையோடு விரட்டினர் மக்கள். அந்தணி தந்த மருந்து அதிவேகமாக வேலை செய்யத் தொடங்கி விட்டது.

போர்ஷியா : (புரூடஸ் மனைவி) என் அருமைக் காதலனே ! நீயா நகரைவிட்டு ஓடுகிறாய். அன்று உம்மோடு சில சதிக்காரர்கள் கூடினார்கள். இருட்டில் வந்தார்கள். ஏதேதோ பேசினார்கள். என்ன என்று கேட்டபோது, “உள்ளே போ” என்று கண்களை உருட்டிக் காட்டினீர்கள். என் தெய்வமே, சீசர் சாவுக்கு உம் சாவை வேண்டுகிறது ரோம். அந்தோ எப்படிச் சகிப்பேன் இந்த நிலையை? என்னால் மன ஆறுதல் பெற முடியவில்லை. எப்படித் தாங்குவேன் இந்தத் துன்பத்தை? என் அருமைத் தலைவன் புரூடஸ் போன பிறகுதான் நான் மாள வேண்டுமா? பேரறிஞன் காட்டாவின் மகளான இந்த போர்ஷியாவுக்கு இறக்கும் துணிவில்லையா?

இப்படி போர்ஷியா ஆருத் துயரால் அழுது கொண்டிருக்கும் போதே புருடஸ் போரில் எதிரிகளிடம் சிக்குதல் கூடாதென்று வாளை நட்டு அதன்மேல் விழுந்து உயிர்விட்டான் என்ற செய்தியை சொல்லி விடுகிருர்கள். போர்ஷியா "ஆ! அப்படியா! என் அருமைத் தலைவனே! எதிரிகளிடம் அகப்பட்டு விடுவோம் என்ற அச்சத்தாலா வாள் மீது பாய்ந்து விட்டீர் என்னைத் தனியாக விட்டுச்செல்ல எப்படி மனம் வந்தது தங்களுக்கு? இதோ வருகிறேன்." என்று சொல்லிக்கொண்டே, எதிரில் எரிந்துகொண்டிருந்த நெருப்பை அள்ளி அள்ளித் தின்று துடி துடித்துப் பிணமானுள்.

பழி தீர்த்துக் கொண்டனர். ரோம் மாவீரன் ஜூலியஸ் சீசருக்குப் பின் அகஸ்டஸ் ஆண்டான் எனினும் பொலிவற்று விளங்கியது.

அகஸ்டஸ் சீசர் காலத்தில் தான் நாசரத்தில் கிருஸ்து பிரான் தோன்றினுர் என்ற நற்செய்தியை நானிலம் கேட்டது.

'ரோம் நாட்டு வீரன்' மடிந்தான் எனினும் அவனது மங்காத புகழ் சரித்திரச் சங்கிலியில் பலமாகப் பிணைக்கப்பட்டிருக்கிறது.

—(முற்றிற்று)—

# எமது பிற வெளியீடுகள்

தென்னக மேடைகளிலே நடிக்கப்பட்டு
புகழ் பெற்றுவரும் நாடகம்

## "மணி மகுடம்"

கலைஞர் மு. கருணாநிதி M. L. A. — ரூ. 1—50

★

திராவிடப் பெருங்குடி மக்களுக்கு கொள்கையை விளக்க
கையகராதி

## "ஏன் வேண்டும் இன்பத் திராவிடம்?"

'முரசொலி' மாறன் M. A. — ரூ. 1—50

★

புதிய முறையிலே அழகாகத் தீட்டப்பெற்ற சிறந்த நாடகம்

## "எழுத்தாளன் காதலி"

பி. சி. கணேசன் B. Sc., B. T. — ரூ. 1—25

★

காதலுக்கும் கடமைக்குமிடையே போராடும்
பணிப் பெண்ணின் வரலாற்றை விளக்கும் எழிலோவியம்

## "அபிசீனிய அடிமை"

பி. சி. கணேசன் B. Sc., B. T. — ரூ. 1—00

★

உரிமை முரசு கொட்டும் உன்னத நாடகம்

## "உதய சூரியன்"

கலைஞர் மு. கருணாநிதி M. L. A. — ரூ. 1—50

★

உள்ளத்தை கொள்ளைகொள்ளும் உணர்ச்சிகள்
ஒருங்கே அமையப்பெற்ற துப்பறியும் தொகுப்பு

## "உயிரை வாங்கிய உயில்"

ரா. வேங்கடசாமி — ரூ. 1—25

★

## "தேனலைகள்"

கலைஞர் மு. கருணாநிதி M. L. A. — (அச்சில்)

